உ

கடவுள் துணை

பராசரமுனிவரால் வடமொழியிற் சொல்லிய

திசாபுத்தி பலனடங்கிய

# பாராசாரியம்



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

இதன் விலை] 1934. [அணா 12.

உ
கடவுள் துணை

# பா ரா ச ரி ய ம்

சூரியசந்திர குஜஜீவசந்திரபூ வந்தபார்சவ தமோகர ஹாங்கவ
தைவவித்கூதி ஸூராக்ரணீ நபாம்பாவயாமி புவனேகலோசனம்,

காப்பு

விருத்தம்

சீர்பூத்த பராசரமாமுனி பகர்ந்த வடநூற்
றிடம் பெருகுஞ் சோதிடத்தின் றிசையபகாரங்க
ளேர்பூத்த சித்திரமே முதலாகக் கோட்க
ளிருந்த ராசிப்பலனு மெதிர்நோக்குப் பலனும்
பேர்பூத்த நவக்கிரகாதிகள் கூடும்பலனும்
பின்புபகைப் பலனுமொன்றாய்ப் பெருந்தமிழாலுரைக்க
கார்பூத்த திருமேனிக் கணபதி சண்முகவேள்
கவுரிகலை வாணிபதங் கருத்தினுள் வைக்குதுமே.

நூல்

## சூரியதிசைப் படலம்

ஆதித்தன் றிசையாறு வருடமது தனிலே
யடுத்தபந்து சனக்கட்ட முத்யோக நாசம்
பேதித்த ரோக மொடுகள்ளர் பயமுண்டாம்
பின்னவர்கள் சம்பத்துப் பிரிந்துவெகு சேதங்
கோதற்ற மூன்றாறு பத்துப்பன் னொன்றில்
குலவரவி பூலாபம் பிதிர்பந்து நாசந்
தீதற்ற சிவபூசை ராசாபி மானந்
தேவபலி தங்கமன சவுக்கிய மாமானே. 1

மானேறும் விழிமயிலே யுச்ச சொக்ஷேத்திரத்தில்
மருவிடினுஞ் சுபர்வர்க்க மருவிலிர விக்கோள்
தேனென்ற சவுக்கியமும் ராசாபி மானந்
தேசக மனந்தனிலே திரவியமும் லாபந்
மேனைநல் விபசாயம் பசுக்காவி பவிதஞ்
சந்திதுர கதநரவாகன யோகமாகும

பூநாறுங்குழலா யொன்பதுக் குடையோ னுடனே
பொருந்திடின்முன் சொன்னபலன் புகலுவர் சோதிடரே. 2

சோதிடரா ராய்ந்திரவி நீசனா னாலுஞ்
சொல்லியதோ ராறெட்டுப் பன்னிரண்டி லேனும்
மாதிடமா யிருந்தாலுஞ் சுபக்கிரகத் துடனே
வந்திடினு மநேகதுக்கம் பயித்தியமு முண்டாம்
போதிடமாய் வளருமயிலிணையுமிகப் பழித்துப்
பொருப்பிளநீர் வேள்மகுடம் பொற்கலசச் செப்புஞ்
சூதினையும் பெருதிவிம்மிப் பணைத்திறுமாந் தெழுந்த
துணைமுலைப் பெண்ணரசியர்க்குத் தூயவமுதரசே. 3

## சூரியதிசையில் சூரியபுத்தி

அமுதரசே யாதித்தன் றிசையிவ னாண்டா
றனமதி மூன்றுடனே நாள்பதி னெட்டினிலே
குமுதமலர்ப் பகையுடையோனுச்ச சொக்ஷேத்திரத்திற்
கூறியகேந்திர திரிகோணந் தன்னிலே யிருந்தாற்
சமபலனுந் தனதான்ய லாபமுறுந்தேக
சவுக்கியம் ராசப்பிரீதி வாகனந்தானுண்டாம்
விம்மியிறுமாந் தெழுந்துகன தனமலையைத் தாங்கு
மின்னலிடை மடமயிலே விளம்பினர் கற்றோரே. 4

கற்றோர்கள் சொலுமூன்றி லாறுபதி னொன்றில்
கமலநண்ப னிருப்பானேற் கனதனலாபத்தோ
டுற்றசவுக்கிய மன்னரால் வஸ்திரலாப
முகந்த வாகனலாப மாபரணலாபம்
மற்றேனு றெட்டுவிய மதுதனிலே யிருக்கில்
வரும்பீடை யிட்டசனத் துக்கமுறுஞ் சோரர்
பற்றலரா லக்கினியாற் பிராணபய மாசர்
பயமுண்டா மெனப்புகல்வர் பங்கயப்பூங்கொடியே. 5

கொடிதான ராசியிலே யிரவியில்லா திருந்தாற்
கூறுதலை வலிகாச்சல் சஞ்சார மாகும்
வடிவான ராசகலகங் களுமுண்டாகு
மற்றவனோடே சுபர்கள் கூடியிருப்பாரேற்
படிமீதில் லற்பசுக முண்டாகு நேசம்
பதிந்திடில் மூன்றாறு பதினொன்றினிற் றுற்பலமாங்
கடிதா மட்டமத்துடையோ னுடனேயுங் கூடிக்
கலந்திருக்கிற் பீடைமனத் தாபமுண்டா மின்னே.

பின்னேகேள் காரியநாசந் தனநாசங்கள்
மிகுராச கலகமுடனிட்ட சனக்கலகம்
பின்னேயு மனைவியாதி புத்திரமித்திரர்க்கும்
பெருத்தகளத் திரந்தனக்கும் வெகுபீடைசேரு
மன்னியதேசந்தனிலே சஞ்சாரமுண்டா
மானைமருப்பைப் பொருப்பைமல்கிய பொற்குடத்தைத்
தன்னெதிரிலாதெழுந்து புடைத்துவிம்மிப்பணைத்த
தனந்தாங்குஞ்சிற்றிடை தள்ளாடுமிளமாதே. 7

மாதேகேளிலக்கினத்துக் குடையவனைக்கூடி
வந்திரவியிருந்தாலு மாதியிற்கிலேசம்
பூதேசஞ்சார மனைவியாதியுண்டாம்
பொருந்துநடுச் சுகமெனவே புகல்வர்கடையதனி
லேதேனுந்தனலாப முண்டாகும்நினைத்த
தெல்லாங்கைகூடும் விவாகஞ்சேருமுயர்ந்த
சிதேவிசேராச தெரிசனமுமுண்டாஞ்
செகதலத்துக் கொருதிலகமென வளருந்திருவே. 8

திருவேநாலுக் குடையோனுடனே தானிந்தச்
செய்யரவிகலப்பானேற் சிறப்புடனே தானும்
வருமேவாகனலாப நிச்சயமாய்ப்பலிக்கும்
வளர்கிரகக்ஷேத்திரமும் பசுக்காலிலாபம்
தருமேபின்விபசாய லாபமுமுண்டாகுந்
தனித்தரெண்டிலேழில் நின்றுலவமிருந்துபயமாங்
குருவாய்மைதப்பாமல் மிருத்திஞ்சசெபந்தான்
குறையறச்செய்தா லதுவுங்குண மாகுமயிலே. 9

## சூரியதிசையில் சந்திரபுத்தி

குணமாமாதித்தன் சந்திரனபகாரந்தான்
கூறியதோரிருமூன்று மாதமதன்பலன்கே
ளிணையாதப்பானுவுடன் சசிதானுங்கூடி
யிசைந்தகேந்திர திரிகோணங்க ளினியிருந்தால்
மணியோடுதனதான்ய கிரகக்ஷேத்திரமும்
வளர்பசுக்கள்வாகனங்க ளதுமிகவும்லாபம்
பிணைபோன் றவிழியுடைய மடமயிலினுளே
பேசுவார்களிப்படியே சோதிடர்கள்தாமே. 1

தாமேயுமுச்ச சொக்ஷேத்திரமதனிலேனுந்
தான்திரிகோணத்தேனுந் தனித்தரெண்டிலேனு
மேயேழுக்குடையவனோ டானுலும்பின்னே
மேலுறுபாக்கியத்தானத் துடையவனோடேனும்

பூமேவுலக்கினா திபனுடனானாலும்
புகுந்துநாலாமிடத்துக் குடையவனோடேனுங்
தாமேவுஞ்சசிகூடி யிருப்பானேயாகில்
தருந்தகனயோகமென்றே சாற்றுமடமயிலே. 2

யோகமிகுதான சவுக்கியங்கள்மிகவுண்டா
முயர்புத்திரலாபமகா சவுக்கியமும்பெருகும்
போகமிகும்ராச சன்மானங்களதுகாட்டும்
பூராசர்பிரீதியினா லனேகலாபமுமா
மாகனகநிதிசேரும் நினைத்ததெல்லாமுடனே
வந்துணைகைகூடும் மதிகசுகம் பின்னுமுண்டாம்
தோகையரேக்ஷேமசுபஞ் சப்ரமஞ்சலாபந்
துலங்கியிடுந்திருச்சேருஞ் சுகமிகவுண்டாமே. 3

உண்டாகுமமரபக்கச் சந்திரனதாக
வுற்றபலவீனமொடு பாவியுடன்கூடிற்
றண்டாததுர்த்தானத் திருந்தாக்காலந்தச்
சாதகர்க்குத்தலைவலிநோய் காச்சலதுவாகுங்
கொண்டாடும்புத்திர மித்திரர்களொடுமற்றுங்
கொண்டகளத்திர நாசமுறவோர்கள்நேசர்
அண்டாதுவெறுப்புபந்து கலகமுடன்விரையம்
அண்டினபேர்காலிநிதி நாசமுறுந்தானே. 4

வேறு

தானான வட்டமத்திற் சசிநின்றாலத்
தானத்தோன் றனைப்பார்த்தாற் சலத்தாற்கண்டம்
மானேகேள்மனவியாதி விலங்குரோக
மற்றவன்றானிருந்தவிடம் பேர்ந்துசெல்வன்
சீராறுமூத்திரகிரிச் சிரரோகங்கள்
சேர்ந்திடுந்தாயாதியினாற் சிலபேர்சண்டை
பூநாறுங்குழல்மடவா யிந்தமார்க்கம்
பொருந்திவெகு கலகமுண்டாய்ப் போகுந்தானே. 5

போகாதுபத்தினிலோன் யானிலேனும்
புகழ்ந்திடுகேந்திரதிரி கோணத்திலேனும்
வாகானசசிபலவா னுடனேகூடி
வதிந்திருந்தாற் றனதான்ய லாபமுண்டாம்
நோகாதசெல்வமுடன் புத்திரலாபம்
நோக்குகளத்திரமித்திர லாபமாகு
மேகாதபுவிலாப மிச்சந்தோஷ
மெழிற்கிரகலாப விவாகமுமுண்டாமேல். 6

மேலானசுபகருமந்தானதன்ம
மிருந்தபலபுண்ணிய தீர்த்தங்கள்சேரும்
மாலாதியாலயத்திற் சென்றுநாளும்
வழங்கிடவுஞ் செய்யுமந்த மதியந்தானும்
பாலாருமொழிமடவாய்ப் பத்தினின்றாற்
பலகருமந்தேவப்பிர திட்டையோடு
சேலாருந்தடாகப்பிர திட்டையுண்டாந்
திகழ்கீர்த்திசம்பத்து சேருந்தானே. 7

வேறு

சோராதுதியபலன் வாக்குடனேசெல்வஞ்
செகராசர்பிரீதியுடன் போசனவிசேடம்
வாராதவாபரணம் வந்துமிகச்சேரும்
வாகனமும்வரும்புத்திர மித்திரர்சுகமுண்டாம்
போராகப்பூமியொடு புதுக்கிரகமுண்டாம்
பெட்புமிகுசவுக்கியமும் பெருநிதியுஞ்சேருங்
கூராரும்வேலினையும் வாளினையும்பழித்துக்
குலவுவிழிமடமயிலே குறித்தனர்கற்றோரே. 8

குறித்திடுசட்டாட்டவியத் தானமதிற்பாவி
கூடவேமதிநின்றால் நேத்திரத்திற்பீடை
பொறித்திடுநற்பந்துசன பீடைகளுமுண்டாம்
பொல்லாததரித்திரியந் தனச்செலவுண்டாகுஞ்
செறித்தமதிநீசனாய் நீசாங்கமேறிச்
சென்றாலுஞ்சட்டாட்ட வியமடையிலேனுங்
கறுத்தமனச்சோரரா லக்கினியாலராசாற்
கலக்கமிடம்பேர்ந்து வெகுகலகமுண்டாமின்னே. 9

மின்னேகேள்வாக்குதனி லேழதனிற்சசிதான்
மிருந்திருந்தாலவமிருத்து பயமுண்டாயகனும்
பின்னேசேயுடன்சகலசுக வாழ்வுண்ட திகப்
பிரபல வாகனமுடனேகாதவழி மட்டுந்
தன்னிகரில்லாத தனதானியமுமுண்டாந்
தழைத்திடுவ னதிகசவுக்கியத்துட னல்போகம்
பொன்னேபூங் குழல்மயிலேயமுதே கற்றேனே
புவியதனிற்சோதிடர்கள் புகன்றனரிவ்வாறே. 10

ஆக அபகாரம் 2-க்கு விருத்தம் 10.

## சூரியதிசை செவ்வாய்புத்தி

ஆதவனார் திசையதனிற் செவ்வாயின்புத்தி
யான திங்கள்நாலுடனே நாளாறுகணக்கும்
போதமிகுசனியிரவிக் கந்தர்கதனைப்
பொருந்திடினும் லக்கினகேந்திர கோணத்தேனும்
நீதமுடனிருந்தாலு முச்சனவனாக
நிற்கிலுஞ் சொக்ஷேத்திரமு மூன்றினுடனாறில்
மாதரசுதனக்கரசே குசனார்வந்தாலும்
வருபலன்களுரைத்திடுவேன் வகையாகக்கேளே. 1

வேறு

வகையுடனே பூமி விபசாயலாப
மாதன தானிய லாபம்வந்துகூடுந்
தொகைபெரு காலமிடத்துக் குடையோனோடு
சொல்லியசேய் கூடிடினும் பூமிலாபஞ்
சுகமான சால்வைமுத லானவஸ்திரம்
துரகதலாபமுந் தளகர்த்தனுமேயாவன்
செகராசர்சமரமதிற் செயமுஞ்செய்வான்
திருநிறைந்த வாகனபூசணமுண்டாமே. 2

வேறு

ஆகாதகுசனீச னாகிவிடும்போது
அரும்பாவியுடனெட்டுப் பன்னிரண்டிலாறில்
வாகாகக்கூடிநிற்கிற் சலத்தாற்றோஷமுமாம்
மகாபாவமபகீர்த்தி கிரகமுடன்போகும்
னோகாதராசவிரோ தங்களதுசேரும்
நுலன்றசத் துருபீடைவருஞ் சங்கிபாசங்காட்டும்
போகாதபுத்திரகளத்திர சேதஞ்சமரிற்
பொருளிரணமனத்தாப மக்கினியாற்பயமே. 3

பயமில்லாலக்னாதி பதியுடனேசேய்தான்
பதிந்திருக்கிற்சவுக்கியமும் ராசப்பிரீயமுமாம்
நயமானபதினொன் றுக்குடையவன் றன்னுடன்சேய்
நண்ணியிடிற்றனலாப நவிலிரண்டுமூன்றின்
இயமானனுடனேசே யுற்றிடிற்சோதரத்துக்
கிசைபீடை சத்துருபீடையுஞ் சொற்பசவுக்கிய
மயலார்களுறவுதனக் குதவாமலன்ன
மதுசெலவுசோராக்கினி ராஜபயங்காணே. 4

காணவேவாகனங்கள் நாசமதேயாகும்
களத்திரபுத்திரமித்திரர் வெகுநாசமாகும்

பூணவேபெருவிலங்கு பூட்டியேவைக்கும்
பொருந்தா றெட்டாமிடத்திற் சேயிருப்பானாகிற்
றோணவேரணபீடை மகாபாவியாவன்
சொல்வாக்குப்பலியாது துயரமிகச்சேருஞ்
சேனிலாவேதயங்கும் வதனப்பெண்கொடியே
செகதலத்திற்சோதிடர்கள் செப்பினதிவ்வாறே. 5

செப்பியதோரொருமூன்றிற் கேந்திரகோணத்திற்
றிகழ்லாபஸ்தானத்திற் சேயிருந்தானாகிற்
சொற்சவுக்கியமுடனே சிலலாபஞ்சேருந்
தூயநல்லகன்மமுடன் றோன்றுமொருநன்மை
தப்பிதமில்லாதிருந்த விடந்தனையும்பிரிக்குந்
தனப்பிரிவுசதிபீடை யபகீர்த்தியுடனே
யொப்பரியபாவம்வரு மனதுக்கத்துடனே
உறவுபகைமனபீடை யுண்டாமென்றறியே. 6

அறிவுடையவாக்கேழுக் குடையவன்சேயாகில்
அதிரோகமனப்பீடை யதுமிகவுண்டாகும்
பொறிமயில்வாகனர் செபஞ்செய் தேழைகட்குத் தானம்
பொருளாடை யுடனன்னம் போதாவே செய்ய
குறியான பரிகாரமாகு மிதில் நலமே
கொழுங்கரும்பு ரசத்துடனே முப்பழத்தின்ரசமு
முறியாமனுறக்காச்சி வடித்தெடுத்தபாகின்
மொழிமடவார்க்கரசான மோகனப்பெண்ணரசே. 7

ஆக அபகாரம் 3-க்கு விருத்தம் 26

---

## சூரியதிசை இராகுபுத்தி

செங்கதிரோன் றிசையதனில் ராகுபுத்திபத்துத்
திங்களுடனிருபத்து நாலுநாளதனிற்
றுங்கமிகும்பாம்பரிக் கந்தர்க்கதனுகிமனுஞ்
சொற்சேந்திரர் திரிகோணந்தன்னி லிருந்தாலும்
பொங்கமுறுமுற்பாதி தனநாசம்பயமாம்
புகழ்சோரராக்கினியாற் பயமரணபீடை
மங்கைநல்லாயரசராற் றனநாசம்புத்திரர்
வருங்களத்திர பிரிவுபின்பாதியிற் சுகமுண்டாமே. 1

மேலானசுபக்கிரகத் துடனேநின்றாலும்
மிகுசுபால் நோக்குறினும் வியனசுபாங்கிசத்திற்
பாலாகவிருந்திடினுஞ் சுபராசியதனிற்
பண்புடனின்றாலு முச்சத்திருந்தா லும்பதிவாய்ச்

சேலாரும்விழிமடவாய்த் திரிகோணத்தேனுஞ்
சிறந்தபத்துமூன்றுறு பதினொன்றிலேனும்
வாலாரும்பாம்பிருந்தத் தானமதுதன்னில்
மருவியிடவதன்பலனை வகுத்திடக்கேளணங்கே.

பலமிருந்தராச வபிமானமதுசேரும்
பண்புடனேயாரோக்கிய மதிகசவுக்கியமாங்
குலவுமகாசுபதன தானிய லாபமுண்டாங்
கூடுமேவஸ்திரமும் பூஷணலாபங்கள்
நலவிபசாயமும் பலிக்கு மகாலபோசனங்கள்
நடப்பிக்குஞ் சட்டாட்ட வியத்தினிற் பாம்பிருக்கிற்
சொலவரியபாவிவந்து கூடினும்பார்த்தாலுந்
துலங்குபலன் சொல்லுவன்கேள் தோகைமடமயிலே.

தோகையரேபந்துசன பீடைகளுமுண்டாஞ்
சுயகிரகபயித்தியமாஞ் சொலும்விலங்குபூனூந்
தா்கமுறச்சோராக்னி பிரணபயமுண்டாஞ்
சந்ததியுங்களத்திரமுந் தானபயமுண்டாஞ்
சேகரமாய்பசுக்காலி நட்டமிகவாகுஞ்
செய்கிரகக்ஷேத்திராதி வெகுநாசமாகு6.
பாகுமொழிமாதேகேள் ராசபயமுண்டாம்
பகர்காச்சல்குன்மசய ரோகம்வரும்பாரே

பாரமுலைப்பெண்கொடியே யதிசாரபீடை
பகர்க்குதலைவலி மரணம்விஷ பேதியுண்டாம்
வீரமிகுலக்கினம்பத்தாறு மூன்றுடனே
மிகுபதினொன்றினிலரவு மிருந்தாலுஞ்சுபர்கள்
வாரமுடன்கூடிடி லன்னோர்கள் பார்த்தாலும்
வருமதிகபாக்யமு மதிககீர்த்தியுமாஞ்
சாரமிகுகளத்திர புத்திராதிமணஞ்சேருந்
தனதான்யமிகச்சேருஞ் சம்பத்துண்டாமே.

சம்பத்துத்தருமிரண்டி லேழினிலேராகு
தனித்திருக்கிலதர்க்குடையோ னேக்கமுறிற்கூடில்
வெம்புற்றமிருத்துபயம் விஷபேதிபயமாம்
மேலதற்குப்பரிகாரந் துர்க்கைசெபஞ்செய்தே
வம்பற்ற யேழைகட்கு அன்னமுட னுடை
வழங்கிடவேசாந்தமிகக் கொடுக்குமென்றுபகர்ந்தார்
வம்புற்றபயோதரங்கள் நெருங்கிவிம்மிப்பணைத்து
மதத்தெழுந்துசிறுத்தவிடை மடமயில்நல்லாளே.

ஆக அபகாரம்-4-க்கு-விருத்தம்-32.

## சூரியதிசை குருபுத்தி

நல்லதொரு பானுவுட திசையிலே தான்
நான்மறை யோனபகார மதியோன் பானும்
வல்லதொரு பதினெட்டு நாளைக் குள்ளே
வரும்புலனை யியம்புகிறேன் வகையாகத் தான்
எல்லவர்க் கந்தர்க்க தனு யிருந்திட் டாலு
மெழிலுடைய லக்ன கேந்திர கோணத்திற்
சொல்லரிய வுச்ச சொக்ஷேத்திரத் திலேனுஞ்
சூரியன்றன் னுடன்கூடி யிருக்கிற் கேளே. 1

கூடியதோ ரஞ் சுபதி னென்றிலேதான்
குறித்த பெல வானுடனே கூடினாலும்
நாடியதோர் விவாகமுடன் ராசபேட்டி
ரத்தின தானியலாபம் புத்திர லாபந்
தேடிய தோர திசு சந்தேக புஷ்டி
செகராசர் நேசவஸ்திர லாப முண்டாம்
நீடியதோ ரதிகீர்த்திக் கரும சிந்தை
நிகழ்த்தி னுலகப்பிரீதி கூடுந்தானே. 2

தானனை வொன்பது பத்துடையோ னோடே
சதுர்மறை யோன்கூடி யிருப்பானே யாகில்
மானேகேள் ராச்சிய லாபங்க ளுண்டாம்
மகாசந்தோஷமு மடைவன் சிவிகை லாபஞ்
சேனதிபதியாய் வஸ்திர லாபந் தான்
சேருமதிசுகம் புதுப் பூக்கிரக முண்டாம்
பூநாறுங் குழல்மடவாய் கருமஞ் சேரும்
பொருட்சேத மாகுமனோ வியாதி யாமே. 3

வேறு

ஆதிமறை யவனீசமாகி யுறும் போது
அஸ்தமனத் தடைந்திடினுந் தனநாச மாகுந்
தீதுவரு மதிகபயம் ராஜ கோபங்கள்
சேருமிட்ட சனநாசஞ் சேர்ந்துபய முண்டாம்
வேதமுனி கேந்திரத்தி லிருந்தானே யாகில்
வெகுபுத்திர லாபமுட னதிசுக முண்டாந்
தீதறுநற் கருமங்க ளதிசெல்வ முடனே
தேகசவுக்கியஞ் சிவபூசையு மிகச்செய் வானே. 4

வேறு

செய்யசுபக் கிரகமது மறையோன் றன்னைத்
தீர்க்கமுடன் பார்ப்பானேற் ஞானக் கேள்வி

அய்யமில்லாத் தடாகங் கோபுரம் ப்ரதிட்டை
 யனேக புண்ய தர்ம மெல்லாமவனே செய்வன்
வைகத்தி லரசாபி மானஞ் சேரும்
 வளர்தன வானுவனஞ்சி லொன்பா னிற்கிற்
கையிலனி வளையுடைய கருங்கண் மாதே
 கணிதர்க ளாராய்ந்த படிகருதிப் பாரே. 5

கருதரிய புத்திர லாபங் கல்யாணங்
 கதித்துவரு மைசுரியந் தேவபூசை
தருமபலன் றன்மலன் மந்திர சித்தி
 தருங்குரு நற்பத்தி யுடன்புத்திர லாபம்
பொருவரிய பூஷண வாகன லாபங்கள்
 பொன்ன வனுர்பதி னென்றிற் பொருந்திநின்றால்
வருமதிக சுகமுடனே கிரகம் பூமி
 வளர்தன லாபங்கள் சத்துரு நாசந்தானே. 6

நாசமுறுஞ் சட்டாட்ட வியத்திலே தான்
 நான்மறை யோனிருந் திடினு நலமில்லாத
தோசமுறும் பாவியுடன் கூடி னுலுஞ்
 சோராக்னி ராசபயம் வியாதி யுண்டாம்
வாசமுடன் சுபரோடே கூடினு மேனல்
 வருஞ் சவுக்கிய பாக்கியமும் போசனங்கள்
பேசரிய வஸ்திர பூஷணங்க ளுண்டாம்
 பிணையிணையு மயிலிணையும் பழித்த மாதே. 7

வேறு

மாமறை யோனபகார மாதியிற் சோபனமா
 மத்தியிலே பரதேச சஞ்சார முண்டாஞ்
சேமமுறு மந்தியத்திற் சிலலாப முடனே
 சிலதுகட்ட முண்டாகுந் தீதுறும் ரெண்டேழுக்
காமிவனே யதிபதியா யுற்றிருக்கி லிவனுங்
 கதிகநோயது கண்டுஅகன் றிடும்பின் யோகஞ்
சேமநிதி தானமுட னற்காலி யோகஞ்
 செழித்திடு மாரோக்ய பலந்திட முண்டாயிடுமே. 8

ஆக அபகாரம்-5-க்கு-விருத்தம்-40.

## சூரியதிசை சனிபுத்தி

இரவியினிற் சனிபுக்தி மாதம் பன்னொன்றே
 டிசையுநாட் பன்னிரண்டின் பலனதனைச் செப்பிற்
பரவுசனி பானுவுக் கந்தர்க்கதன கிடினும்
 பலித்திடு லக்கினகேந்திர திரிகோணத் தவனும்

விரவியிடு முச்சசொ க்ஷேத்திரத் தானத்தவனு
மிகுசுபரோடே கரியோன் கூடியிருப் பானேற்
றிருவுறையுந் தனதான்ய விவாகமது சேருந்
தீர்க்கசுகஞ் சத்துருவை செயம்புரி வான்மின்னே. 1

செயமான வாகனத் தானத் தோனைக்காரி
சேர்ந்திருக்கத் திரவியமும் வஸ்திர பூஷணமும்
நயமான வாகனமும் புத்திரகத் துடனே
நல்லசுப சோபனமும் ராசப்ரீதியுமாஞ்
சுயபூமிலாப மொடுதன தான்ய லாபந்
தொகுத்து வரும் பாவரிவன் றனை நோக்குவாரேல்
பயம்ராச கோபமொடு தாயாதிக் கலகம்
பந்துவினா லுயிர்ச்சேதம் பருவிலங்கு வருமே. 2

விலங்கு வருந்தன நாசங்காரிய நாசங்கள்
விளங்குமிட்ட கிலேசமொடு மிகபயமு முண்டாங்
கலங்கிமிகச் சண்டைவருஞ் சட்டாட்ட வியத்திற்
காரிநிக்கிற்புத்திரகளத்திரநாசந் தேக
பெலன்குறையுமதிகபயந் தொடுத்த காரியமும்
பிரண்டுவரும் வயற்றுவலிவாயுவினால் ரோகஞ்
சொனாங்காச்ச லதிசாரஞ் சன்னியு முண்டாகுந்
தூயமொழிப் பவளவிதற் றோகையிள மயிலே. 3

மயிலேகேள் காரிபுத்தி யாதிமித்திரர் நாசம்
வரும்நடுவி லற்பசுங் கடையில் மகாகிலேசம்
பயிலாசர் மூலத்தாற் றனதான்ய நாசம்
பகர்கேந்தி கோணத்திற் பாவருடன் கூடி
இயங்கிநிற்க மார்பதனில் வெருகுத்துக்காணும்
இசைபுத்திரர் நாசமன்னிய தேசசஞ்சாரங்கள்
* தயலேவா றெட்டினிற் றீகோளுடனே கூடிற்
றனதிக பயமுண்டாஞ் சத்ருபயமாமே. 4

சத்துருவாம்புத்திரனாந் தாரத்தாற் பிரிவாஞ்
சமித்தியமும் பயித்தியமுஞ் சரீரமான முமா
மெத்தவுள ராசபயஞ் சத்துரு பயங்கூடு
மிகுந்தெய்வ நிந்தைதர்மநிந்தையதுசேரு
நத்திவருஞ்சகோதரர்க்குப் பீடை பந்துநாச
நலமில்லாவிபசாய நாற்காலி சேதஞ்
சித்தமுடன் பருவிலங்கு பூணவுமேசெய்யுஞ்
செழுங்காரி பாவியுடன் சேர்ந்திடி னல்லாளே. 5

* தயலே-தையலே.

நல்லதொரு லாபத்தானத்தினிலே காரி
நண்ணியிடி லதிகருமங்க ளத்திர புத்திரலாபஞ்
சொல்லரிய பூஷணவஸ்திர தான்ய லாபஞ்
சொலுங்கரி யோனிரண்டேழுக்க திபதியா யிருந்தால்
மெல்லவருமவ யிருத்துகண்ட முண்டா யகலும்
விளம்பு பரிகரிமுதலாய் நாற்காலியாதி
வல்லதொருசெல்வவானெனப்புகழினுடனே
வாழ்ந்திடு வனவயிருத்து தோஷமு மாறிடுமே. 6

ஆக-அபகாரம்-6-க்கு-விருத்தம்-46.

---

## சூரியதிசை புதன்புத்தி

தோஷமில்லா ரவிதிசையிற் புதன்புத்தியாகத
தொகுத்த தொரு காலத்துள் சொலும் பலனைக் கேளாய்
நாசமில்லாப் புதன்கேந்திர சொகேஷத்ர வுச்சம்
நல்லபல வானுடனே கூடியிருந்தாலும்
பேசரியசுபருடனே கலந்திருந்தானேனும்
பெருத்தசுகம் பூலாபஞ் சந்தோஷ முண்டாம்
நேசமிகு புத்ரமித்ர களத்திர ராதிக்கு
நேரான சவுக்கியமுண்டா மெனச்சொல் மாதரசே. 1

மாதேகேள் ராசசன் மானங்களுட னேதான்
வரு மதிகக் கீர்த்தி வித்தை லாபமு மேயாகுந்
தீதேது மில்லாதது தன்னைகூடுங் கோவால்
சிறக்கும் வஸ்திர பூஷணமும் லாபமுமே யுண்டாங்
கோதேது மில்லாததர்ம தீர்க்க தானங்கள்
கொடுத்திட நாற்காலிவெகு லாபமிக வுண்டாம்
போதே வீடாகவளர் சிதேவி சேரும்
பூங்கொடியே கணிதநூற் புகன்றன ரிவ்வாறே. 2

வாகான பிதிர்த் தானலாபத் தானத்தான்
வகைக்கதிபனுடன் கூடி புந்திநின்றாற் பலன்கேள்
நோகாமற்றிர வியவஸ்தி ரத்திேனாடு வுலகில்
நோக்கரிய பூஷணமும் வாகனமு முண்டாம்
போகாத சிவி கையுண்டாந் திரிகோணந் தனில்மால்
பொருந்தி யிடில்ராச சன் மானங்க ளுடன்தக்க
யோகாதி நல்ல புத்தி தானதருமங்க
ளுடன்தேக சவுக்கியமு முடையவ னுவானே. 3

வேறு

ஆகுமே பூராசர் பிரியத் தோடு
ஆனதொரு விபசாயம் பூமி லாபம்
வாகுபெரு தாளமணி மாலை யோடு
வரும்நரவா கனம்வஸ்த்ரா பரணந்தானும்
யோகமிகு வித்வசன ருடனே கூடி
யொழுங்குபெறக் கல்வி யறிந்திடுவ னப்பா
போகமிகும் போசனந்தான் சவுக்கிய மாகும்
பொருமி விம்மிப்பணைத்தவிரு முலைப்பூம்பாவாய். 4

பூவையரே சட்டாட்ட வியத்தி லேனும்
பொருந்திடா நீசத் தானத்தி லேனும்
பாவனையாய்ப் புந்தியுறி லன்னோன் புத்தி
பாராதி சவுக்கியம் பூஷண மாரோக்யங்
கோவைமிகும் புத்திர பூஷண லாபங்கள்
கொடுக்கும் வஸ்த்ரலாபமுடன் சவுக்கிய முண்டாம்
தேவையுள்ள போஜனங்கள் மிக வுண்டாகும்
செப்பதனை பழித்தமுலைத் திருவே கேளாய். 5

வேறு

வேகமிகு மத்தியத்திற் சதாரோக பீடை
மிகுத்துவிடுங் கடையதனிற் றலைபிடியுங் காச்சல்
சோகமுறப் பரதேச சஞ்சார மன்னர்
சொலுங்கோபஞ் சூரனுடனிவன் கூடி யிருக்கில்
வாகுபெரு நாற்காலி களத்திரமு நாசம்
வரும்வாக்குச் சல்லியமு மரசர்பய முண்டாம்
பாகினையு மமுதினையுந் தெளிவினையும் பழித்துப்
பழகுமொழி மடமாதே பகர்ந்தனர் முன்னூலே. 6

முன்னூலின் படி யிரண்டேழுக் குடையோ னாகி
முதிர்புலவன் றனிருக்கில் மோசம் வெகுசேத
மன்னோர்க்குத் தலைவலியுஞ் சுரபீடை யுண்டா
மதுதனக்குப் பரிகாரம துசகஸ்ர நாமந்
தன்னாலே செபஞ்செபிக்கச் சகல தோசங்கள்
தானகலும் யோகமுடன் சவுக்கிரமா மென்றே
சொன்னார்கள் சோதிட நூலாய்ந்து கரை கடந்தோர்
தோகையென வளர்சாயற் சொல்லினி லஞ்சுகமே. 7

ஆக அபகாரம்-7-க்கு-விருத்தம்-53.

## சூரியதிசை கேதுபுத்தி

சுகமில்லாச் சூரியனிற்கேது புத்திமாசஞ்
சொலு நாலு நாளாறிற் றேன்றுபலன் கேளாய்
மிகுராவிக்கந்தர்க் கதனுக்கே திருந்தால் செலவு
மிகுதேக பீடைமனோ பீடையுடன் றுக்கம்
வெகுராச கலகமுடன் பந்து சனநாச
மிகுந்தலக்கி னுதிபதி யுடன்கூடி யிருக்கிற்
றகுமாதி தனிற்சவுக்கியந் தனலாபம் நடுவிற்
றருபீடை கடையினிலே சேதமிகத் தருமே. 1

தருகாதா றெட்டினிற்கே திருந்திடினும் பாவர்
தன்னுடன் சேர்ந்திருந்தா லுங்கனரோகந் தாக்கும்
வருகிரக மாற்றிவிடும் மாதுர் சதிபீடை
வளர்பிதிரு நாசம தாம் பானுவுடன் கூடிற்
பொருள் நாசமுடன் ரோகமதிக பயத்தோடு
புயங்கபயமித்ர புத்ரநாச மதுகாட்டும்
உருகாத விரும்புருக வினிய மொழி புகலும்
ஒண்டொடியே கணிதநா லுரைத்தன ரிவ்வாறே. 2

உரைத்த மூன்றாறு பத்துப் பதினொன்றிற்கேது
உதித்திடினுஞ் சுபனுடனே கூடியிருந் தாலுந்
தரைக்குள் வெகுதன லாபங்கலியாணஞ் சேரும்
சந்தோஷகாரியங்கள் நன்றாகக் கூடும்
பொருத்த மிகுபிதுர் பாக்கியத்தானத் தோன்றன்னைப்
புயங்கமது பொருந்திடினும் புத்திரலாபந்தான்
கருத்துறவே ராசாபி மானமது சேருங்
கசதுரகவா கனலாபமு மிகவுண்டாமே. 3

உண்டாகும் லாபத்தா னத்தோனைத் தானே
யுரைகேது கூடியிடிற் சவுக்யமிக வுண்டாந்
தண்டாத மூன்றுடை யோனுடன் கூடிநின்றால்
சகோதரத்தில் நாசமுறுந் தனித்திடுமாறுதி
அண்டிநிற்க சுரபீடை பத்தினிலே நின்று
லவனினைத்தகாரியங்கள் கைகூடாதே போம்
வண்டாரும் பூங்கூந்தல் கருமேகமென்ன
மயிலாடு மதிவதன மானினைக் கண்மாதே. 4

கண்ணாகு மிரண்டேழிற்கே வந்துநின்றாற்
கடியதொருபீடைவந்து கழிந்துவிடும் பின்னே
எண்ணியவாகனமும் பூமிதன தான்யம்
இராசர்களின் விசுவாச மினும் பலநற்பலன்கள்
தண்ணாருஞ் சோலையுடன் புதுமணங்களாதி
சமைத்ததிகசுகவாழ்வு தன்னையடைவானே

பண்ணுருஞ் சுரும்பினிசை பாடிடுமைக் கூந்தற்
பங்கயமா முகத்திருவே பகந்தனர் நல்லோரே. 5

ஆக அபகாரம்-8-க்கு-விருத்தம்-58.

## சூரியதிசை சுக்கிரபுத்தி

பங்கயநண்பன் றிசையிற் புகரபகாரந் தான்
பன்னிரண்டு மாதமதிற் பலாபலஞ் சொல்லிடக்கேள்
செங்கதிரோன் புகர்க்கந்தர் கதனுகி யிடினுந்
திரிகோண ரேந்திரவுச்சந் தனிற்புகர் சேர்ந்தாலும்
பொங்கமுறு நாற்காலி தனலாப முடனே
பொருந்து களத்திர சவிக்கியம் பிறதேசவாசந்
துங்கமிகுமரசர் மறையோர் களுடன் நேசந்
தூயமிகுலாபமுஞ் சந்தோஷ மிகச் சொல்லே. 1

சொல்லரிய பாவியுடன் புகரது சேர்ந்திடினுஞ்
சொலுநீச னுடனுறுஞ் சட்டாட்ட மியத்தினிலே
வல்லமையாயஸ்த மனக்கிரக முடன் கூடி
வந்திடினு மக்கள்களத்திர பீடை யுடனே
நல்லகிரகம் பிரிவு தனம் பூமிநாச
நவின்றபந்து வால்நாச நாற்காலி நாசங்
கல்லல்மிகு வுத்தியோக நாசமது காட்டுங்
கனதேக பீடைசத்துரு கலகமு முண்டாமே. 2

கலகமிகுநோய் சேருங்கிரக வுபத்திரத் தாற்
கனராசர் விரோதமற்ப சவுக்கியமு முண்டா
முலகில்மனத் தாபமுட னரசபிமான
முடன்சுபாதிபமாகுமுடைய திசைநாதன்
குலவுகேந்திர கோணந்தன்னி லிருந்திடிலோ
குறித்ததன லாபம்வரும் பன்னொன்று மிடத்தில்
பலமுறவே யிருந்தாலு முச்சசோ கேஷத்திரத்திற்
பதிந்தாலு மதன்பலனைப் பகருவன் கேள்மின்னே. 3

பகர்வன்கேள் மேதினி லாபத்துடனே யுயர்ந்த
பார்த்திபர் சன்மானமுறும் பரிசிவிகை சேரும்
நிகரில்லா வஸ்திர பூஷணலாபங்கீர்த்தி
நேரிழையார் சவுக்கியம் புத்திரலாப முண்டாஞ்
செகமனரா லுத்யோகசீவனமு முண்டாந்
தெய்வதாபத்திகளத்திர புத்திரசவுக்கியம்
புகழ்பெருகு கஜதுரகமிவன் பாலிற் சேரும்
பொன்னு சப்பரமஞ்சமுடன் பொருந்திய வாழ்வுண்டே. 4

பொருந்திநிற்குஞ் சட்டாட்ட மியத்தானந் தனிலே
புகருறினும் பாவருடன் பொருத்தமுடன்கூடி

இருந்தாலுந் தனம்புத்ர களத்திர நாசங்கள்
இராஜகோபங் களுண்டாமிவன் புத்தி முதலில்
வருங்காலஞ் சிவிகையுறு மத்தியத்திற்கஷ்டம்
வந்துவிடு மத்தியத்திற் றனதான்ய நாசந்
தருங்கிரகம் பொருந்திவிடுந் தேகமதிற் பீடை
தானுண்டாம் பந்துசன நாசமதுண்டாமே. 5

நாசமுறும் ரெண்டேழு மிருகுறி யோனுனல்
நற்தேக பீடை துக்க மட்டமத் தோனுடனே
வாசமுறில் மிருத்துபயம் வந்தகலுங் கண்டாய்
வகையான வேறு பலபிணிபீடை யாதி
நேசமிக வாயவதி வந்தகன்றுபோகும்
நீதியுடன்பின் பலனே நிறையான வாழ்வாம்
பூசியசாந்திழைத்தெழுந்து புடைத்துவிம்மிப் பணைத்துப்
பொருப்பெனவே யுயர்ந்தமுலைப் பொற்கொடி மின்னாசே.

ஆக அபகாரம்-9-க்கு-விருத்தம்-64.

## சந்திரதிசைப் படலம்

### வேறு

சந்திரன் றிசையிலாண்டு தானதுபத் துக்குள்ளே
வந்திடுஞ் சிவிகைலாபம் வளர்ந்தபோசனம் படுக்கை
செந்திருமிகவுஞ் சேர்வாள் சிறப்பிலாச் சத்ருநாசம்
இந்தவாறுண்டா மென்றே யியம்பினர் கமலமாதே. 1

மாமதிவாக்கிலேல்லும் வளர்பதி னென்றிலேலும்
நேமமாய்க் கேந்ரகோண நின்றுமேசுபர்களோடு
தாமுறநிதி யிலாபந் தான்ய நாற் காலிலாபம்
பூமியிற் களத்திரத்தோடு புத்திர லாபந்தானே. 2

தானறி வித்தைபார்க்குஞ் சாற்றுவான ரசராலே
மேன்மையாஞ் சந்தோஷங்கள் விளையுமா றெட்டானாலும்
ஊனமாம் பனிரெண்டேனு மூதிக்கிமிற் களத்ரபுத்ர
ரீனமாந் தானியாதி யிசைந்திடு மென்றுசெப்பே. 3

செப்பிய பரதேசத்திற் சென்றுசஞ்சாரஞ்செய்வன்
ஒப்பிலாச் சலத்தாற்கண்டமுற்றிடு முலகந்தன்னிற்
றப்பிலாபலாத் தாந்தானத் துடையவன் றுனே பார்த்தா
லிப்புவிய தனிற்பின்னே சுகமுண்டா மெனச்சொல்மானே. 4

சொல்விய திசையிலாதி சுகமன்னர் சமானமாகும்
நல்லமத்தியத்திற் புத்ர களத்திர நாசங் காட்டும்
வல்லதோர் கடையிற்றான்ய தனமுடன் கிரகவாழ்வு
செல்வமு முண்டாமென்று செப்பினர்கயற் கண்மாதே. 5

ஆக விருத்தம்-69.

## சந்திரதிசை சந்திரபுத்தி.

மாமதி யதனிலந்த மதிபுத்தி மாதம்பத்தில்
நேமமா முச்சகேந்திரங் திற்கோணந் திரிகோணத்திற்
ருமுற்றவாட்சி வீட்டிற் றாநம்பதி னொன்றிலேனுஞ்
சேமமாய்ச்சுபர்கள் கூடிற் பார்த்திடிற் சிறப்புண்டாமே. 1

உண்டாகும் விவாகந்தானு முறுபுத்ர லாபந்தானும்
கொண்டாடு மாகசாலை குறைவிலாக் கிராமம் பூமி
தண்டாத சிவிகையோடு தாசு வருந் தீர்க்கமாயுள்
வண்டாடுங் குழலாய்பின்னு மாசவுக்கிய முமாமே. 2

மேவுபூரணமாய்ச் சந்திரன் வீற்றிருப்பானே யாகில்
பாவகமாகப் பூர்ண பலனசுக மதிகமாகும்
பூவையே பாக்கியங்கர்ம பூபதியுடனே சேர்ந்தால்
மாவுடன் மதகயங்கள் வரும்பல மின்னங்கேளே. 3

பலனுறு தெய்வபக்தி குருபக்தி பலநாற்கேள்வி
நலனுறு வஸ்திரலாபம் நண்ணிடும் பாவ...
பலமுறச் சேரிலாறெட் டீராறிற் பலதருமிற்கிற்
குலவிய கனநாசந்தான் கூறுவேற் கன்னியாளே. 4

கன்னியே கிரகம்போகும் கனமஸ்தாபமாகு
மன்னராலமைச்சராலே வருங்குரோதமு முண்டாகும்
மின்னுறு தேகநாசப் பெருவட திசைபிலேதான்
அன்னிய தேசப்போக்கு மவன்கொடுக்கிடுவனம்மா: 5

வளமிகுமாறுளோனும் வலிய செவ்வாயுங் கூடிற்
றனமிகுஞ் சத்ருவோடே சமர்பெருகவ மாதுதான்
புனைகுவன சேனைபோகும் புகழ்மித்ர பந்துநாசங்
கனமெனுங் குழலாய் ராசந்துரோகமுங் காட்டுந்தானே. 6

காட்டிடு மிரண்டேழுக்காமதி யுடையோனுமில்
கோட்ட மிவ்வெட்டுள்ளோனை கூடினுற்றேக பீடை
வாட்டிடாத கனும்பின்னே மனையோடு புதுமையாதி
கூட்டியே வைக்கும் யோகம் குறைவில்லை திசைபாய்ந்தானே. 7

ஆக விருத்தம்-76

---

## சந்திரதிசை செவ்வாய்புத்தி.

வான்மதி திசையிற் செவ்வாய் வரும்புத்தியேழுமாத
மானசந்திரற்குச் சேயந் தர்க்கதனுகினும்
ஞானகேந்திர கோணத்தினலம்பெறு மாட்சியுச்சத்
தானங்கள்தனிலே செவ்வாய்த் தங்கிடிற் பலனைக்கேளே.. 1

செய்யதோர் தேகாரோக்யஞ் சவுபாக்யஞ்சேரும்
வையக மன்னராலே வஸ்த்ர பூஷணமும் பொன்னு
மெய்திடு சிவிகைபூமி கிராமமுமியல் பாய்ச்சிக்குந்
தையலே நினைத்ததெல்லா தான் பலித்திடு மென்றுதே. 2

ஒதுமாறெட்டீராறி லுற்றிடப்பாவி கூடத்
தீதுறு நீசத்தானஞ் செறிபகைத் தானஞ்சேரிந்
கோதறு கருமநாசஞ் கோப்பகை தேகபீடை
வாதுறுகிரகம் போகும் வருஞ்சுரம் பயித்தியந்தான். 3

தானெனுமா றெட்டீராற் றனிற்சுபர் கூடினாலு
மானவர் பார்த்திட்டாலு மற்றுங்கேந்திர கோணாதி
மோனமாய்ச் சேர்ந்திட்டாலு முரித்தாரணி பொன்புத்ரர்
கூனலஞ் சிவிகையாவுங் கூடும்பால் பாக்கியந்தானே. 4

கூடிடுமிரண்டிற் செவ்வாய்க் குறிகிடிலர்த்தநாசம்
வாடிடுந்தேக பீடை வரும்பரு விலங்குசோரர்
நாடுமக்கினியாற் கோவால் நடுக்கிய பயமுண்டாகுந்
தோடவிழ்மலர்ப்பூங் கூந்தற் றூய்மதி முகத்தினாளே. 5

வேறு

மதித்திடு கேந்திரகோண முச்சசொக்ஷேத்திரத்தில்
வதிந்திடினு மூன்றுமிரு மூன்றுபத்தும் பன்னொன்
றிதத்துடனே யிருந்தாலு மொன்பது லக்கினத்துக்
கிறையவர்கள் சம்பந்த மெய்திடினு மியல்பாங்
கதித்திடுகயப்புரவி பதாதிதன தான்யங்
கருதுநாவாகனமுங் காசினியுமுண்டாம்
விதத்துடனே சப்ரமஞ்சஞ் சாலுவை வஸ்திரங்கள்
மிகுமன்னர் சமானமித்ர புத்திர சவுக்கியமே. 6

இயம்பக்கேள் சட்டாட்ட விவமதிலே செவ்வா
யிருந்திடிலோ மனஸ்தாபந் தனநாசம் பீடை
செயம்பெற நினைத்ததெல்லாம் அபசயமதாகுந்
தீர்க்கமுட னிரண்டேழிற் சேயிருந்தானெனினுங்
கயம்புரமெட்டா மிடத்துக் குடையவன் றன்னுடனே
கருதுமெட்டாறீராறிற் கலந்திருந்தானெனினும்
பயமிகுந்த வவமிருத்து பிராணமயமகலப்
பரிகாரஞ் சிவபூசை பண்ணிடிற்றீர்ந்திடுமே. 7

ஆக விருத்தம்-83.

---

## சந்திரதிசை இராகுபுத்தி.

மேதினியிற் சசிதிசையிலிராகு புத்திதனிலே
மிகுமாதம் பதினெட்டு விளங்கிழஞ் சந்திரற்கே

ஆதரவாயந் தர்க்கதனு யிருந்துசுபனோ
டடுத்திருக்கினிவனைத்த தெல்லாம் பலித்திடு மூன்றுறில்
நீதமுடன் பத்துடன் யன்றொன்று கேந்திரத்தி
னின்றாலு மூச்சமதினின்றிடி லுக்ரானே
ஆதியிலே சவுக்கியஞ் சத்துருநாச மத்தியம்
அதிற்சோராக்கினி ராசபய மிகவுண்டாமே. 1

உண்டான நாற்காலி பீடை மிகச்சேரு
முருமாச மூன்றுவரை பந்துசனநாசம்
விண்டாரு மதற்குமேல் தனதான்யலாப
மிகுராச ரபிமானம் நிருதிதிக்கில் லாபம்
திண்டோளர் சண்டையினிற் செயம்படைக்கும்மேலாந்
திரவியங்கள் வஸ்திரங்க ளளவிலாதேற்றம்
வண்டாருங்குழலாய் சேயத்தானமுற்றால்
வலியயுத்தசத்துருபய மிருத்துபயமாமே. 2

பயமான வவமிருத்துத் தோஷமது நீங்கும்
பகுத்தறிவோடே பின்னால் பலத்த வாழ்வுண்டாம்
சுயமானவட்டமத்தான் சமபந்தம் பெற்றாற்
சொல்லரிய விலங்குண்டாஞ் சுபக்கோள் சம்பந்தம்
நயமாகப் பெற்றிருக்கிற் சுகமுண்டாம் நாற்கால்
நற்பதிவஸ்திரங் கீர்த்தி தேகமாரோக்கியஞ்
செயமான கேந்திரத்தி லிருந்தாலு முன்னே
செப்பியதோர் பலன்வந்துஞ் சேருமெனவுரையே. 3

உரைசெவ்வாயிந்து விலுக்கேட்டமாறதனி
லுறப்பாவியுடன் கூடித்துற் பலமாயுறினுங்
தரையிலிலக்கினம் வாக்கிற் புத்திரத்தானத்திற்
சார்ந்திடினும் யோகபங்கந்தனச் செலவுண்டாகும்
விரைவாரும் புத்திரநாசங் கலகஞ்சல்யம்
மிகுகுட்டநோய் விலங்குவீடு முடன்போகும்
நிரையாயுட்கவ மிருத்துச் சத்ருசர்ப்பபயமும்
நீங்காதசண்டையுண்டாம் சொரிகரிபூங்குழலே. 4

பூங்குழலே பாம்பேழா மிடந்தனிலே யிருந்தாற்
பொருந்து தனதானியங்களதிகவிர்த்தி யுண்டாம்
பாங்குறவே முன்சொன்ன தன்நிமற்றதானம்
பதிந்திருந்தால் பீடையன்ய தேசசஞ்சாரங்கள்
பாங்கரியவேழில் மாரகத்தானனுடனே
பற்றிடினு மெட்டுடையோன் சம்பந்தம் பெறினுங்

தீங்கானவவமிருத்துப் பயந்தேகபீடை
திர்ப்பதற்குப் பரிகாரஞ் சிவபூசை செய்யே. 5

ஆக-விருத்தம்-88

## சந்திரதிசை குருபுத்தி

செய்யமதி திசையதினிற் குருபுத்தி மாதஞ்
செப்புபதினாறதனிற் சிறந்தபலன்கேளாய்
அயமில்லாச்சக்தி மற்கந்தர்க்கதனு
யமர்ந்திடில் புத்திரலாபமதிக சுகஞ்சிவிகை
தெய்வகாரிய பூசை அரசாபிமானஞ்
சிறந்தவஸ்திர பூஷணங்கள் நாற்காலிலாபம்
வையகத்திற் சோபனங்கங்காஸ்நான பலனும்
வருமிஷ்ட தேவதையும் பிரார்த்தனை செய்வானே. 1

நேரான வுச்சகேந்திர கோணத்தேனு
நிற்கசொக்ஷேத் திரத்தேனு மிரண்டுபன்னொன்றினிலும்
பேராமலே யிருக்கில் ராசாபிமானம்
பெருத்த தனகர்த்தர்சுகம் பேசுகயலாபம்
வாராதசட் டாட்ட வியந்தனிலேயத்த
மனமாகில்நீசனாய் வந்தாலும்பாவி
யாரோடுங்கூடிடினுங் களத்திர புத்திரநாசம்
அருங்கிரகம் வெந்துமுற்று மதிக துக்கம்வருமே. 2

துர்க்கமிகுஞ் சண்டை யுறுங்கிரக க்ஷேத்திரமுஞ்
சொர்ணதிதிநாசங் கேந்திர திரிகோணத்திற்
சிக்கெனவே யிருந்தாலும் திரிகோணமூலத்
திரிகோணம் பெற்றிடனு நல்லபோசனமா
மிக்கதொரு விவாகமுடன் நல்லோர்களுறவு
மிருந்திடு நற்கீர்த்தியோடு சிவிகையாபரணம்
வஸ்திரமொடு தனலாப புத்திரகளத்திர
வர்த்தனையோடனதானம் வாகனம் வந்திடுமே. 3

வந்திடுமேராச்சியமுந் தனமதிக முண்டாம்
வருஞ்சமரிற் செயம்படைக்கு மன்னவர்களாலே
தந்திடுமே பூமிதனில் நிதியஞ் சட்டாட்டந்
தனிற்பிலனா யிருப்பானேற் சாதகன்றன் பலன்கேள்
நிந்தை தருமன்னிய தேசந்தனிலே யோட்டும்
நீங்கரிய போசன கட்டங்களுமே யுண்டாஞ்
சொந்தமெனச் சுபர்கூடி லாதியிலேசுகமாஞ்
சொல்லுமந்தி வியாதிகடை களத்ர புத்ரர்கேடே. 4

வேறு

கேடுறுமிரண்டேழ்நாதன் குருவுடன்கிட்டினாலே
நீடவமிருத்துவந்து நேரிடும்பரிகாரந்தா
னாடிடிற் சிவசகஸ்ர நாமமே செபமுஞ்செய்து
வாடுநுண்ணிடையா யன்ன தானமும் வகையாய் செய்யே. 5

ஆக விருத்தம்-93

சந்திரதிசை சனிபுத்தி

வேறு

வகைவாஞ் சந்திரன் றிசையிற் காரி புத்தியதுதான்
வருடமொன்றேழ் திங்கள்வருமதிக்குக் காரியுமே
தொகையா மந்தர்க்கதனாய் கேந்திர திரிகோணத்
துற்றிருந்தா லற்பசுகம் லாபமற்ப மாகு
மிகவேதான் பந்துஜனவிரோத முடன்பீடை
விபரீதங் காரியங்க ளபசயமாய்ப்போகும்
பகைசேரும் பயமுடனே நாற்காலிசேதம்
பரதேசசஞ்சாரம் பலித்துவிடுந்தானே. 1

வேறு

பலனான கேந்திர கோணத்திலேனும்
பகர்கின்ற லாபத்தானத்திலேனும்
பிலவான்கள் தன்னுடனே சேர்ந்திட்டாலும்
பின்பு சொக்ஷேத்திரவுச்சம் பெற்றிட்டாலும்
நலமான வாரெட்டொரா றுதன்னில்
நல்லசனி பலவானா யிருந்திட்டாலும்
தனலாபம் புதுக்கிரகம் புத்திரலாபந்
தருஞ்சிவிகை கலியாணந்தானுண்டாமே. 2

தானவஸ்திரபூஷணமுண்டாகுஞ்
சகராசரால் நினைத்ததெல்லாங் கூடுஞ்
சேனாதிபதியாவன் கிராமம் பூமி
திரவியலாபங்கள் மிகச்சேரலாகு
மானாலு மாறெட்டொ ராறுதன்னி
லவனீசனாஞ்சுபரோடடைக் தானாகில்
மானேசௌசுப பலமதிகக் கஷ்டம்
வருநீச ஸ்திரீபோகம் வருமென்றோதே. 3

ஓதியசோர் புத்ர களத்திரங்கள் தானும்
உடன்பிரிவாயாதுர் பிதுர்நாச மாகும்
போதுகுன்மரோக பயித்தியமுமுண்டாம்
புகழிரண் டென்றியுமேழுக் குடையோனாகிற்

நீதுவருஞ் சுரநோவு தானுமுண்டு
திருதற்குப் பரிகாரங் குலதெய்வந்தைக்
கோதகலப்பூசைசெய்து ஏழைக்கன்னங்
கொடுத்திடவே நலமெனச் சோதிடர் சொன்னாரே. 4

ஆசு விருத்தம்-97.

சந்திரதிசை புதன்புத்தி

திடமான சந்திரனிற் புலவன் புத்தி
சேர்ந்துவருமோராண்டோடைந்து மாதம்
இடமான திங்களுக்கு புதனுமங்கே
யிசைந்திடுமந் தர்க்கதனு யெய்தினாலும்
தடமாகுங் கெந்திரகோணங்கள் தன்னிற்
சார்ந்தாலுமாட்சி சுபாங்கிச முற்றாலும்
வடமேருதனக்கு நிகரெனப் பருத்த
மாதனத்தாளே பலனைவகுக்கக் கேளே. 1

வகுத்திடும் பாலன்வமுடன் பாக்கியம் பூமி
மன்னரால் நினைத்ததெல்லாம் வந்துசேரும்
மிகுத்துவரும் வித்தையுண்டாஞ் செட்டுலாப
மித்திரர்கள் சந்தோஷம் ஞானவிர்த்தி
பகுத்துரைக்கி லெக்காலும் வித்தை நோக்கம்
பதியுனரவாகனமும் பசுவுமுண்டே
நகத்தினைச் செப்பினையிணையாய்ப் பணைத்து நிற்கும்
நற்றனமாதரசியற்கும் நல்லமாதே. 2

மாதே நீசத்திலுற்றோர்தனை சேர்ந்தாலும்
வருமஸ்த மனமாறெட்டி ராறேனும்
தீதாக விருந்தாலும் பாவியோட்ட
சேர்ந்தாலும் வருமதிக தேகபீடை
சூதாகுங்களத்திர புத்திர பீடை காச்சல்
துூரதே சங்கமனஞ் சிரநோயுண்டாம்
வாதாடு மாசராற் சோரராலும்
வருமதிகக் கலகமென வகுத்தார்தானே. 3

தனதான லக்கினத்தோ னுடனேபுந்தி
தான்கூடிலாதியிலே சவுக்கியத்தோடு
கனலாப மாசரபி மானமுண்டாங்
கருதரிய சட்டாட்ட வியத்திலேனும்
இனமான கோணத்திலேனுங் கேந்த்ர
மிருந்தாலும் விவாகம் வருமிக்கலாபஞ்

சினநூலி னிளைத்தவிடையாதே கேளாய்
சேர்ந்திடுமே கர்மவினைச் சாபந்தானே. 4

தானமொரு ராசாபிமான முண்டாந்
தருங்கனக சிவிகைவஸ்திர தனலாபங்கள்
ஆனதொரு சட்டாட்ட வியத்திற்பாவி
அவனுடனே புதன்கூடி லானியான
மானம்வரும் பாவமதில் மனதுசெல்லும்
வருங்கிரக மாற்ற மனைவியாதியுண்டாந்
தேனமருமொழிமாதே யெடுத்த தெல்லாஞ்
செயமில்லையபகீர்த்தி சேருஞ் சொல்லே.

## வேறு

சொல்லியவி ரெண்டேழுக்குச் சோற்புதனுதனுகில்
வல்லதோரவ மிருத்துவேரும் பரிகாரங்கேளாய்
நல்லதோரரி சகஸ்ரநாமமுஞ் செபமேசெய்தா
லொல்லையிற்றீரு மென்று உரைத்தனர் கணிதநூலோர்.

ஆக விருத்தம்-103.

## சந்திரதிசை கேதுபுத்தி

உரைத்த விந்து திசையதனிற் கேதுபுத்தி
உயர்மாக மேழதனின் பலனைக்கேளாய்
நிறைத்தசிகிக்கந்தர்க் கதனுகினும்
நிறைந்த சுபக்கிரகமுடன் கூடினும்
வரைத்த மூன்றாறு பத்துப்பன் னொன்றின்மேல்
வருமுச்ச மாகிடினுஞ் சுபர்ப்பார்த்தாலும்
தரைத்தலத்தி லதிகார் வாகன முஞ்சேருந்
தன்கிரகந் தனிற்சுபங்கள் கூடும்பாரே.

## வேறு

கூடிவரும் ராசாபிமானம் விபசாயங்
குறைவில்லாத் தனதான்ய மிகுமதிகசுகமாம்
நாடியனு கூலமுறுஞ் சோரர்களினாலே
ஞாயமிலாக் காரியமும்நற் கலமீறுங்
கேடரியவாறுமிரு நான்குபனி ரெண்டிற்
றீயவர்களோடாவு சேர்ந்துலவுமாகில்
மாடுமுதலாடுலருமே சுகமும் வாழ்வு
மத்திபமதான பலனுற்று முளவோதே.

ஓதியதோரந்தியத்திற் கெட்டபலனுடனே
உறுமூர்த்திர கிரிச்சிரரோகங் காணுங்கலகந்

தீதுபெரும்வாக்கேழிற் சிகிருளிகன் சேரிற்
தீர்க்கமாய் கண்டமவன் புத்திபிலேகாட்டும்
மாதுயரந்தீ வென்றும் பரிகாரஞ் சொல்லக்கேள்
வாய்த்தகொரு அன்னமது வருத்தக்கணைத்தானே
மோதுவெளியோர் தனக்குக் கொடுத்திடுவானாகி
லுறுதியுடன் தீருமெனவுரைத்திடு பூங்கிளியே.

ஆக விருத்தம்-106.

## சந்திரதிசை சுக்கிரபுத்தி

பூங்கிளியே சந்திரனிற் புகரின்புத்தி
பொருந்திநிற்கும் வருடமென்று மாதமெட்டிற்
பாங்குபெறத் திசைநாதன் றனக்கேகியிந்தப்
பர்க்கவன்றானந்தார்க்கனுகினாலு
நீங்கரிய கேந்திரகோணத் தற்றாலும்
நித்தியமாம் லாபத்திற் பெலவானேனாட
யாங்குகனி கூடிடினும் பூமிலாப
மதுசேரும் மதியாகு முகத்தினாளே. 1

மதியாத வாக்கதனில் நயத்திலேனும்
வந்திருந்தார் புதையலுண்டா மாசராலே
துதிசேரும் வஸ்திர பூஷணத்தினோடே
சொலவருநாற்காலி புத்திர களத்திரவிர்த்தி
புதிதான கிரகமுண்டாம் பணிபண்டாதி
போசனாசனமிகவும் பொருந்திவாழ்வான்
கதிசேரிபாசாங்க யோகமுண்டு
கலத்ததன மடமயிலே கருதிப்பாயே. 2

கருதியபத்தாமிடத்துக் குடையவன் றன்னுடனே
கலந்திருந்தாலதிக சுகப்ராச்ய முதலாபம
கிரகமதிலேபெளத்திர புத்திரர்களுடனே
சேடிலாபிதுர்மாதுர்சுக மிகவுண்டாகும்
வருமதிக வித்தையொடு கீர்த்தியுண்டாயோங்கும்
வனையமதன் மகுடமதை வாய்த்த விளநீரைப்
பொருகாட க்கய மருப்பை மனைமுகையைப் பழித்துப்
புடைத்தொழுந்தண்ணுந்தமுலைப் பூங்கொடிப் பெண்ணமுதே. 3

பெண்ணமுதே கவிசேனாகி யஸ்தமனமாய்ப்
பெரும்பாவி யுடன்கூடிச் சட்டாட்டவியத்தில்
நண்ணவுமேக சேய்பார்வை யுற்றிடினும் பூமி
நாசமுமஞ்சி[illegible] கிரகம் போகும்

வண்ணமிகு நாற்காலி யாலதிகநாசம்
வருமரசர்கோபம் புத்திரகளத்ரநாசம்
பண்ணமருங் குயில்மொழியாய்க் கணிதநூன்முழுதும்
பழுதாவாய்ந் தோருரைத்த பலனிதுவுமாமே. 4

ஆனதொருவுச்ச சொக்ஷேத்திரங்க ளதுதனிலே
யதிகசவுக்யாதி பதியுடன்கூடிநிற்கிற்
ஞான தன்மஞ்சிவபூசை குருபக்தியுடனே
தருமமுறைவிசுவாசந் தனமுமிகச்சேருஞ்
சேனைமன்னரபிமானஞ் சிவிகைபுத்ரகளத்ரந்
திரமான தளகர்த்தஞ் சேர்ந்தினிதாயிருப்பர்
மீனினையம்பினைப்பழித்தநங் கணங்களுயிர்கவரும்
விளங்கியவேல்விழிமாதே விளம்பியதிப்படியே. 5

படிமீறு திரிகோண கேந்திரத்திலேனும்
பகர்வாக்கிற்பாக்கியத்திற் கவியிருந்தானேனு
முடிவேந்தரபிமானம் பூமியொடுவித்தை
மொழியுநரவாகனபூஷணவஸ்திரமுடனே
வடிவாருங்களத்திரபுத்திர வாவிவிபசாயம்
வாய்க்குமினுப்பாலனமுங் குளந்தேனும்புசிப்பன்
கடியாரும்பூங்குழலாள் மாதுர்பிது சவுக்கியங்
கருணைதருஞ்சிவபத்திக் காரனெனவுரையே. 6

உரைத்திடுசட்டாட்டவியத் தானத்திற்பாவி
யுடன்கூடிலதிகட்ட முற்றவர்சத்துருவாந்
தரித்திரங் களத்திரசல் லியம்பந்துநாசந்
தான்புத்ரபிதுர்நாசந் தரணிமன்னர்கோபம்
பருத்தகுட்டநோய்விதன பந்தனத்தோடிருமல்
பரதாரகமனமுமே பலபலவுண்டாகும்
நிறைத்தவிரண்டேழினுக்கு மிவனுதனுகில்
நிகழுமவமிருத்தேகுஞ் சிவபூசைநிகழ்த்தே. 7

ஆக விருத்தம்-113.

---

## சந்திரதிசை சூரியன் புத்தி

நிகரிலிந்துதிசையதனி லிரவிபுத்திமாசம்
நிகழாறுதனிற்பலனை நிகழ்த்திடுவேன்கேளாய்
பகருமிந்துதனக்கிரவியந் தர்கதனுகிற்
பண்புடன்சொக்ஷேத்ரவுச்சத் திரிகோணகேந்திர

மிகவாக்குமூன்றாறு வொன்பதுபத்துடனே
விழித்திடுபன்னொன்றினிலே மேவிடிற்செந்திருவுஞ்
சுகராசர்சமானமுடன் தனலாபசுபங்கள்
சொல்விடிற்சோபனம்பூமி போனதெல்லாம்வருமே. 1

வருமேநல்லிராவுபுத்தி கடையினிலேரோகம்
வலுத்ததலையிடிகாச்சல் சோம்பல்மிகவுண்டாங்
தருமேசட்டாட்டவியந் தனிற்பாவியுடனே
சார்ந்திடினும்பவர்நோக்குத் தான்வரினுங்குன்மம்
பெருநோவுதலைவலியு முகநோவுமூத்ரப்
பெருக்கிரிச்சரோகமுடன் சத்ருவிருத்தியுயாய்
நறுமலர்ப்பூங்குழற்றிருவே யபகீர்த்தியுடனே
நாடுமித்ரநாசமுட னலியுஞ்சார்ந்திடுமே. 2

சார்ந்தலக்ஞாதிபன்றான் பிதிர்க்கதிபனுடனே
தான்சேருவானாகிற் றனலாபமின்பஞ்
சேர்ந்துவருங்கடையதனிற் செறியுமனக்கிலேசந்
திறமானமாதுர்பிதுர் நாசமதுவாகும்
ஆர்ந்தசகோதரஸ்தானங் கேந்திரதிரிகோணம்
அதிலாபத்தானத்தி லடைந்திருக்கிற்பலன்கேள்
தேர்ந்திடுநாற்றிசைவாக்குப் பெலத்தினாலே
திறமானராசாபிமான மெனச்செப்பே. 3

செப்புநரவாகனமும் வஸ்திரபூஷணமுஞ்
சிறந்தபுத்திரலாபமுடன் புதுக்கிரகமுண்டா
ஒப்பில்வெகுசந்தோஷந் தேகசவுக்கியமும்
உடன்பெருவன்சட்டாட்ட வியம்பாவிகூடிற்
றப்பாதுராசாக்கினி சோரர்பயமுண்டாந்
தலைவலியுங்குன்மமுடன் காச்சலதிசார
மிப்பாரிலன்னியதேக சத்துறுவன்பித்த
மேற்படுமென்றறியுமென வியம்பினர்சோதிடரே. 4

திடமுடனேயிரண்டேழுக் கதிபதியாதவனேல்
செப்புதலைவலிகாச்சல் ரோகமதுசேரும்
அடவுடனேபரிகாரந் தனையறையக்கேளா
யலரிதனக்கின்பமுட னமஸ்காரஞ்செய்யில்
மடமையுள்ளநோயகன்று சுகமேயுண்டாகும்
வாளயில்வேல்கூற்றெனுங்கண் வாளெயிற்றுநாகப்
படமெனவேவளருமல்குல் மாதேநூலாய்ந்து
பகர்ந்தனர்கள்கணிதமுறைப் பயனறிந்தோர்தாமே. 5

ஆக விருத்தம்-118.

## செவ்வாய்திசைப் படலம்.

வேறு

தாமுருஞ்செவ்வாய் திசையிலேழாண்டு தனிற்பலனாசர்சோராக்னி
மாமனப்பய நோய் களத்திரசண்டை வருந்தரித்திரியமுமற்பச்
சேமமாங்கிரகமாற்றந் துற்கருமஞ்சிறந்திடும்பிதுர்க்கள்புத்திரர்கள்
பூமியுநாச மென்றுரைபகர்ந்தார் பூங்குயிலனைய பொற்கொடியே. 1

பொற்புறுமுச்சு மிரண்டினிற்பத்திற் புகழ்ந்திடு மூன்றினிலாறில்
நற்பலவானுய்சேயிருப்பானேல் நலமுடன் சுபமுடன் ராச்சியங்
கற்புளகளத்திர புத்திரவஸ்திரம் காதல்சேர் சகோதராபரணம் [மே
விற்பொனுறுதலாயிதுவெலாங் கிடைக்கும் விளங்கிடுமேன் மையுந்தரு

வேறு

மேன்மையில்சட்டாட்டவியந் தனிலுறிற்றுற்பலமாய்
மிகுசெவ்வாயுற்றிருக்கிற் புத்ரமித்ரகளத்ரம்
ஆனதொருவஸ்திர பூஷணநாசமாகும்
அதிகருன்மரோகமொடு விபசாயங்குறுகு
மான்விழியாய்த்தனநாசஞ் சகோதரமுநாசம்
வருஞ்சுபனேடேகூடில் வளர்கலகமுண்டாம்
ஈனமிலாத்திசையாதி தனநாசம்நடுவி
லிசைசோராக்கினிமுடிவி லிகலுறுஞ்சத்துருவே. 3

ஆக விருத்தம்-131.

---

## செவ்வாய்திசை சுயபுத்தி.

இகலாரற்றிசையதனி லுபகாரமதுதா
னிசைமாதநாலுமிரு பத்தேழுநாளில்
மிகவேதான்சேயகேந்திர திரிகோணம்பெறினும்
மிகுந்தலக்னதிபன் றன் னுடன்கூடியிடினுஞ்
செகமீதிலற்பசவுக்கிய மற்பலாபந்
திகழ்சோம்பல்அபகார மத்தியிற்குடும்பப்
பகையாகுஞ்சகோதரங்கள் புத்திரசந்தோஷம்
பால்பாக்கியமரசரால் நிதிதான்யம்வருமே. 1

வருமைதருநீசமஸ்த மனத்தையடைந்தாலும்
வருமெட்டாறீராறில் வதிந்திடுவவெனினும்
பெருமையில்லாமானபங்க மனஸ்தாபந்தீயாற்
பெருத்தகள்ளராற்பயமாஞ் சகோதரத்தாலுறவால்
பொருமையிலாவிரோதமுடன் பிணிராசகோபம்
பொருந்தும்விலங்குடன்மூத்திர கிரிச்சிரரோகங்கள்

தருமேபின் பயமுண்டா மென்றுவடநூலோர்
சாற்றினர்தப்பாதிதுவுந் தார்குழற்பெண்ணாசே. 2

சேயவனும் சுபாங்கிசமாய்ச் சுபனோடேகூடித்
திகழ்ந்தவனுலேபார்க்கிற் சேர்கிரகம்பூமி
ஆயமொருநாற்காலி பசுவாபமாச
ரனுக்கிரகமிட்டசித்தி யதிகசுகமுண்டாந்
தீயவன்றனவர்க்கேழுக் கதிபதியதாகிச்
சேர்ந்திருக்கில்வெகுபீடை மனவியாதியாகும்
தூயபரிகாரமது மங்களநாள்விரதந்
தொடுத்தொரு மண்டலமிருக்கத் தோசமகன்றிடுமே. 3

ஆக விருத்தம்-124.

---

## செவ்வாய்திசை இராகுபுத்தி.

அதிகமிகுகுசன்றிசையில் ராகுவபகாரம்
ஆண்டொன்றுநாள்பதினெட் டாகுமதின்பலன்கேள்
பதியானசேய்க்கரவந் தர்க்கதனுயிருக்கிற்
பாரசன்டைராசபயந் தனதான்யநாசம்
அதிகமனவியாதியுட னுற்காலிநாசம்
அவமானஞ்சத்ருபயம் விபசாயநட்டஞ்
சதிசெவ்வாய்ராகுமொருபாதமதிவிருக்கில்
தருராசபயங்கலகஞ் சாய்ந்திடுமென்றுரையே. 1

உரைத்தபணிசேய் சுபனோடேகூடினுனு
முற்றசுபனுர்பார்வை யுற்றடம்பெற்றூனுந்
தரைத்தலத்தில்மூன்றுறு தசமதிற்பன்னொன்றிற்
சார்ந்திடினுந்திரிகோண கேந்திரமுற்றிடினும்
நிறைத்தபலனரசாபி மானமதினுலே
நெடும்பூமிலாபமுத்தி யோகமதுதன்னுல்
வரைத்தனத்தாய்தனலாபங் களத்திரபுத்திரர்கள்
வாழ்வுடனேவிபசாயம் வளருமிகத்தானே. 2

தானியலாபத்துடனே தருஞ் சமுத்ரஸ்நானந்
தான்கிடைக்கும்மத்தியிலன் னியதேசஞ்செல்வன்
ஆனதொருகளத்திரபுத்திர கிலேசம்வழிமார்க்க
மதிற்சோரபயமுண்டா மந்திரத்திலேதான்
கோனவன்றன்கிருபையினுல்
குறித்திடுசெட்டாட்டவியம் பாவியுடன்கூடில்

மானனையாய்சுபர்நோக்குப் பெற்றாலுமரசர்
மனஸ்தாபம்விபகாயம் நாசமுந்தானே. 3

நாசமுறுந்தேகபித்த க்ஷயரோகமுண்டாம்
ராசராலக்கினியாற் சோரராற்பயமாம்
பாசமும்பருவிலங்கு பாதமதிற்பூட்டும்
பகர்ந்திடுமூன்றுறிபத்து பன்னொன்றிலேனும்
நேசமுறுந்திசைநாதன் தனக்குலாபத்தில்
நின்றாலும் வித்தைவரும் மதிகசவுக்கியமாந்
தேசமதில்விபசாயம் தனதான்யலாபஞ்
செகராசர்கிருபையினாற் சந்தோஷம்வருமே. 4

வருமேதானிவன்புத்தி யாதியிலேயிடை
மத்தியத்திற்சுபாசுபங்கள் வந்திடுமந்தியத்திற்
தருமேதானதிகசுக மிரண்டேழிற்செவ்வாய்
தானிருக்கிலவமிருத்துப் பயங்களுண்டாமதற்கும்
பரிகாரஞ்சிவபூசை பண்ணினர்சுகமாம்
பவளவிதழ்க்குவளைவிழி பாலனஞ்சேர்மொழியாய்
உருகாறவிரும்பினையு முருக்குமிளங்குயிலே
உரைத்தனர்சோதிடமறிந்த வுத்தமர்களதானே. 5

ஆக விருத்தம் 129.

## செவ்வாய்திசை குருபுத்தி.

நேசமுறுஞ்செவ்வாயிற் குருபுத்திமாசம
நிகழ்த்துபதினொன்றோடு நாளாறின்பலன்கேள்
வாசமுறுகுருகுசனுக் கந்தர்கதனுகி
வந்திடினும்கேந்திரகோணத்தையடைந்தாலும்
ராசனாற்சன்மானமதிகீர்த்தியுண்டாம்
நல்லவஸ்திராபரணம் வருமிராசமூலத்தார்
பேசரியகனமுடனே சாமரங்கள்சுருட்டி
பெருஞ்சிவிகைலாபமெல்லாம் பெற்றிடுவன்மாதே. 1

பெற்றவுச்சசொக்ஷேத்திரந் தன்னிலிருந்ததிகப்
பெலவானாய்சுபாங்கிசனா யிருந்தாலுஞ்சுபனா
யுற்றசுபலக்கினத்தை யடைந்தாலும்ஸ்திரீயா
லுறுபயனுந்தசாதிபதி பார்த்திருந்திட்டாலும்
கொற்றவர்கள்சன்மானம் நாற்காலிலாபங்
கூடும்விபசாயமுடன் றுனியமும்லாப
மற்றுமிகபெரியோர்களுறவுவரும்பின்னே
மாதீர்த்தமாடுவன்பின் வரும்பலனைக்கேளே. 2

கேடிலாச்சிவிகையொடு வஸ்திர ஆபரணங்
கிடைத்திடுமேபூமிபுத்திர லாபமட்டசித்தி
கூடவேசட்டாட்ட வியந்தினிலேபாவர்
கூடினுமவராலே கொடும்பார்வையுரினும்
ஈடிலாநீசமஸ்த மனத்தையடைந்தாலும்
இமயகுருபெலவீன னாகியிருந்தாலும்
ஊடலாமாசராத் சோரராத்ரியா
லுறுபயமாஞ்சர்ப்பவிட முற்றிடுமின்னாளே. 3

மின்னேநீயின்னமுங்கேள் நீழிவுரோக
மிருத்துவருங்கெட்ட போசனம்பந்துநாசம்
பின்னேயுமவனிருந்த வீடுவிட்டுப்போவான்
பெருத்தவொருகோண கேந்திரலாபத்தான
மன்னேன்போயிருந்தாலு மரசாபிமான
மதிகசகோதரசவுக்கிய மாந்தான்யலாபம்
பன்னாளும்விபசாய சவுக்கியமாரோக்யம்
பால்பாக்யங்களத்ர புத்ரலாபமுறுமாதே. 4

தேடாதசட்டாட்ட வியந்தினிலேகுருவுந்
திகழ்பாவியுடன்கூடிப் பாவர்பார்த்தாலுங்
கூடாதுதருமசிந்தை பாவம்தேசேருங்
குறித்ததன தானியமும் வெகுநாசமதற்கு
ஈடாகுமாதியிலே சவுக்கியமதாகு
மிசைந்தமத்தியந்தியத்திற் றுற்கேள்வியுடனே
வாடாதநாற்காலி விபசாயநாசம்
வரும்பீடைசர்ப்பய மக்னிபயந்தானே. 5

பயமாகுமராசாற் சோராற்கலகம்
பதிகிரகம்போந்துவிடு மனவியாதியுண்டாம்
நயமானவிரண்டேழுக் கிவனுதனுகில்
நாடுமவமிருத்துபயம் பரிகாரமதற்குச்
செயமீதுசிவனுருக் கபிஷேகஞ்செய்து
சேமமுறவேழைகளுக் கனதானஞ்செய்ய
கயமாறுங்கோடதனைப் பழித்திளக்கிக்கனத்துக்
கமலமுகைபோலெழுந்த கனதனப்பெண்கொடியே. 6

ஆக-விருத்தம்-135.

---

## செவ்வாய்திசை சனிபுத்தி.

கொடியேகேள்செவ்வாயிற் சனிபுத்திமாதங்
கூறுபதின்மூன்றதின்மேல் நாளொன்பான்பலன்கேள்

படிமீதிற்குசனுக்குக் காரியந்தர்க்கதனைப்
   பதிந்திடினுஞ்சொரேஷ்த்ர கேந்ர திரிகோணம்
வடிவாகுமூலத்ரி கோணத்திலேனும்
   வகுத்தவுச்சமுச்சாங்க மாகியிருந்தாலுங்
கடிதானமூன்றாறு பத்துலாபத்திற்
   கனபிலனாய்ச்சுபாலே நோக்கமுற்றாற்கேளே. 1

உற்றராச்சியஞ்சுகமா மகாகீர்த்தியுண்டா
   முயர்ந்திடும்புத்திரலாபங் களத்திரலாபமுமா
மற்றரசசன்மான புத்திரவிர்த்தியுந்தான்
   வருமவன்றன்மாதமதில் மகாசவுக்கியமாகுங்
குற்றமுறுநீசனாய்ச் சட்டாட்டவியத்திற்
   கூடமிலேச்சர் துடுக்காரற்பயமதாகுஞ்
செற்றமிகுமரசராலுறு தனதானியங்கள்
   சேதமதுவுண்டெனவுஞ் செப்புவர்கற்றோரே. 2

ஓரைமிகுவாக்கினிலும் பிதுர்த்தானத்தினிலு
   முறுபாவியுடன்கூடிற் பயந்தனநாசமுமாம்
பாரதனிலன்னிய தேசங்களிற்சஞ்சாரம்
   பருவிலங்குமனநோயி சகோதரமும்நாசம்
வீரமிகுமாசாராற் சோரராற்றீயால்
   மிகுபயமுண்டாகிவிடும் வியன்கிரகம்போகும்
மாரணமாங்காரியமதாய்ச் சத்துருபயமு
   மகவுபந்துகளத்ரமுடன் மாதுர்பிதுர்கேடே. 3

கேடிலாச்சனிகேந்திர திரிகோணலாபங்
   கிடைத்திருந்தாலகீர்த்தி யன்னியபாவத்தில்
வீடல்லாமனதுவருஞ் சிலகருமமிசையு
   மெழிலார்மாதுருநாச மனநோயுமுண்டாம்
மாடுபோங்கிரகம்போந் தான்யம்போமெதிரி
   வருஞ்சமரிலபசெயமா னீரிழிவுரோகம்
ஊடலுருஞ்சட்டாட்ட வியந்தனிலும்பாவி
   யுடன்கூடுவானாகி லவமிருத்துபயமே. 4

மேதினியிலாசராற் சோரராற்றீயால்
   விழுங்குசற்பத்தாற்பயமா மிகுசுரமுண்டாகு
மோதரியதலைவலியும் வாதபித்தரோக
   முடன்வயிற்றுவலியாகும் தனநாசமிரண்டேழ்
நாதனிவனாகில் மிருத்துடபயமுண்டாகும்
   நல்லபரிகாரமது நவின்றிடக்கேளணங்கே

நீதமொடுசிவபூசை பயபத்தியுடனே
நித்தமுஞ்செய்திடிற்றோசம்நீங்கிடும்நிலத்தே. 5

ஆக விருத்தம்-140.

---

## செவ்வாய்திசை புதன்புத்தி.

நிலத்திலேபிறந்தவன்றன் றிசையதனிற்புத்தி
நிற்குமபகாரமது திங்கள்பதினொன்று
பெலத்துவரும்நாளிருபத் தேழினுக்குப்பலன்கேள்
பேசுபுதன் குசனுக் கந்தர்க்கதனுகிடினுஞ்
சொலத்தகுகேந்திரகோணந் தன்னிலிருந்தாலுஞ்
சொலும்புராணக்கேள்வி தர்ம தானமுடன்கீர்த்தி
நிலைத்திடுஞாயங்கள்சொல்வ னல்லபோசனமும்
நிறைசிவிகைவஸ்திர பூஷணலாபமாமே. 1

மேதையுறுநீசனு யஸ்தமனமாயும்
வியத்தானஞ்சட்டாட்ட மேவிடவேயிருந்தும்
நீதமிலாப்பருவிலங்கு பந்துசனமக்கள்
நேரிழையாள்நாற்காலி நாசமிகவுண்டாம்
பேதமொடுதிசாதிபனோடே கூடினாலும்
பெருத்தசத்துரு பீடைபயம்பிரதேசகமன
மோதரியராஜவிரோதமுங் களத்ரகலக
முற்றிடுமென் றுரைத்தனர்கள் கற்றறிவுள்ளோரே. 2

மறைவிலாக்கேந்திர கோணத்தினிலேதானும்
வருமுச்சத்தடைந்தவனை மாலவன்கூடிடினும்
நிறைலாபத்தடைந்தாலும் ராஜசன்மானங்கள்
நீங்கரியஉத்யோகம் வஸ்திராபரணங்
குறைவிலாப்புத்ரகளத்திர லாபமுடனே
கூறியசாஸ்திரகேள்வி ஞானவாசிப்பு
முறையாகலட்சுமி கடாக்ஷமதுண்டாகும்
முதுமொழியோர்சொன்னமொழி தப்பாதுமயிலே. 3

தப்பாதுசட்டாட்ட வியாமதிலேபாவி
தான்புதனோடேகூடி லதுமானபங்கம்
பொய்ப்பாவந்தனில்மனது செலுமீனச்சாதி
போராட்டநற்கரும நாசமதுவாகும்
இப்பாரிலரசராற் சோரராற்றீயால்
ஏற்படுநட்டம்பலமாய்ச் சண்டைமிகவுண்டு

மெய்யான ரெண்டேழுக் கிவனுதனுகில்
மேதினியிலரிசகஸ்தர நாமசெபஞ்செய்யே. 4

ஆக விருத்தம்-144.

---

## செவ்வாதிசை கேதுபுத்தி.

நாமமுறுஞ்சேய்திசையிற் கேதுபுத்தியதுதான்
நால்மாதமிருபத்தேழ் நாட்பலனைக்கேளாய்
சேமமுறுங்கேதுகுசற் கந்தர்க்கதனுகிற்
சேர்ந்தசோதரந்தானஞ் சம்பந்துலாப
மாமுச்சக்கேந்திரகோ ணந்தனிலேயேனு
மவனிருந்தார் சொர்ப்பசவுக்கியத்துடனேலாபம்
தாமதஞ்சேர்செலவதிக மாதிபுத்தியதிலே
தனித்தமத்தி சுபாவசுப மங்பலன்கேளே. 1

பலமுறவேதன தான்யம் காலிமிகலாபம்
பார்த்திபர்கள்சன்மானம் பகைவியஞ்சட்டாட்டம்
நலமில்லாப்பாவனே டிருப்பானேயாகில்
ராசபயஞ்சத்ருபயம் பீடைமனவியாதி
கலகமிருங்காரியமுங் கெடுதியதிபயம
காலவுணவிட்டசன வுபத்திரமுங்காட்டுந்
தலைவலியுங்காச்சலுட னீரிழிவுஞ்சாருஞ்
சகோதரத்தில்மரணமுறு மவமிருத்துமுண்டே. 2

அரவானமூன்றாறு பத்துபன்னொன்றீ
ராறிலிருப்பினுமற்ப சவுக்யமற்பபலனுந்
தவமானலாபத்தா னத்திலுறிற்சுபமாக்
தான்பொல்லாவிடந்தன்னிற் கேதிருந்தானுல்
பவமானவாதியிலே தனநாசம்நடுவிற்
பகர்சொர்ப்பசவுக்கியமாம் பன்னிரெண்டெட்டாறி
லிவர்பாவியுடன்கூடிற் கபாலதந்தரோகம்
இராசசோராக்கினிபயஞ் சயம்பீடைதானே. 3

தாரமிகும்புத்திரர்க்கு வெகுநாசமுண்டு
தானிரண்டேழாமிடமாந் தனத்திறையாயிருந்தாற்
கோரமிகுமவமிருத்து தோஷமதாமதற்குக்
குணமானபரிகாரங் கூறிடுவன்கேளாய்
வீரமிகுஞ்சிவபூசை பத்தியுடன்செய்தால்
வெகுசுகமதாகுமென விளம்பினர்கள்கணிதர்
ஆரமும்பூணணியுமணிந் திலங்கியபூண்முலையா
யாடவர்களுயிர்கவரு மமுதமொழிமானே. 4

ஆக விருத்தம்-148.

---

## செவ்வாய்திசை சுக்கிரபுத்தி

யானேகேள் சேய்திசையிற் கவிபுத்தியதுதான்
மாதமதுபதினுலில் வரும்பலனைச்சொல்வே
னுனுலுஞ்சுக்கிரன்சேய்க் கந்தர்க்கனுகி
யதிகவுச்ச சொக்ஷேத்ரம் கேந்திரகோணத்திற்
ருனேகற்சுபரோடே கூடியிருந்தாலுந்
தனராச்சிய லாபமுடன் றந்திபரிலாபந்
தேனேறுமலர்க்குழலா யதிகசௌக்கியமும்
க்ஷேமமினிப்பெருவனெனச் செப்பினர்சோதிடரே. 1

திடமானலக்கினுதி பதியுடனேகூடிற்
சேர்ந்த களத்திரபுத்திர சம்பத்துவிர்த்தி
யுடனேதான் றேகசவுக்கியமதிகசுகமா
முறுலாபா திபனிவன்ற னுடன்கூடுவானேல்
அடவாக புத்திரபாக்கியமதிக சுகத்தோ
டாஜ்ஞபரிலாப முறுமாசாபிமான
மிடமானகிறகமதிற் றிருநிறைந்துவாழு
மென்றுறைத்தாற் கணிதமுணர்ந் திசைத்தமதியோரே 2

மறைவானவாறெட்டீ ராறுவிருந்தாலும்
வருனீசனுகவிருந் தால்மார்பிற் குத்துக்
குறையாருஞ் சமரதனி லபஜெயமுண்டாகுங்
கொடுந்தீயாற் பயங்களத்திர கலகமிருங்கிரக
முறைபோந்து தென்றிசையிற் சஞ்சாரமுண்டா
முழுக்கட்டந் தானுதவும் புதன்சசியோடேதா
னிறைபலமாய்ச் சேர்ந்திருக்கி லரசாபிமானம்
நீங்காதுயிட்டசித்தி கீர்த்திவரும்நிசமே. 3

மேவியதோரோன்பதுக்கு மிலாபமதுதனக்கு
மிக்கதிபனுடன்கவிதான் கூடிடுவானுகிற்
பூவினிலேபிதுர்சவுக்கியந் திரவியம்பூலாபம்
பொருந்துமண்த்துடன் புத்திரலாபமிகவுண்டாம்
பாவையரேரோகபரி காரமதுவாகும்
பகர்கேந்திர திரிகோண மூன்றுபதினொன்றி
லாவலுடனடைந்தாலும் திற்செய்யும்பலனை
அறையக்கே ளமுதமெனப் பகருமொழிமயிலே. 4

மயிலேகேள்கவிபுத்தி யாதியிலேதானும்
வருமேபுண்ணியதீர்த்த தானமுடனதிகச்
செயலானதேவதா தெரிசனமுமுண்டாஞ்
செய்தானதர்மமுடன் றடாகப்ரதிட்டை

நயமானபூலாபம் வஸ்திர பூஷணமும்
 வாபமுறுந்தளகர்த்த னுதவியினற்க்ஷேமம்
புயமாதுபோலதிக வடிவுடையமாதே
 பூதலத்திலிப்படியே புகன்றிடுமுன் னூலே. 5

நூலோர்கள்சொன்னபடி சட்டாட்டவிபத்தி
 னேக்கரிய ரவியுடனே சேர்ந்திருப்பானகில்
மேலேதான திகதுக்க மரசாரக்கடின
 விலங்குவருங் கேந்திரத்தில் வியாதிபயமுண்டாம்
பாலர்களுங்களத்திரமும் வெகுநாசமரசர்
 பயமுடனே சோராக்கினிபய மிரண்டேழினுக்குச்
சிலமுடனிவனுத னகிவிடில்ரோகஞ்
 செய்வதற்குப் பாகாரஞ்சிவபூசைதானே. 6

ஆக விருத்தம்-154.

## செவ்வாய்திசை சூரியபுத்தி.

நேரானசேய்திசையி லாதித்தன்புத்தி
 நிகழ்மாதநாலுடனே நாளாறதாகுஞ்
சீரானசேயதனுக் கிரவியந்தர்க் கதனுப்
 திகழ்சொக்ஷேத் திரவுச்ச கேந்த்ரமடைந்தாலுஞ்
சீராருமூலத்ரி கோணமடைந்தாலுந்
 தேகசவுக்கியமரச ரபிமானங்கீர்த்தி
மாரார்ததலையிடிநாற் காலிபந்துநாச
 மவன்வாரந்தனி லாசர்பேட்டிமிகவருமே. 1

புவிமீதிற்சட்டாட்ட வியத்தினிலாதித்தன்
 பொருந்தாதபால ருடனீசருடன் கூடி
லவமானகிலேசமுடன் பந்துசனக்கலக
 மதிகமனஸ்தாபமுட னுதினிற்கஷ்டம்
பவமானநடுவினுமந் தியத்திலுமேயதிக
 பலக்கேடு பரதேச சஞ்சாரமுண்டாம்
நவில்போலுங்கணைபோலும் வேல்போலும்விழியாய்
 நாவினிலிப்படியுரைத்தார் நல்லறிஞர்தாமே. 2

இப்படியேசட்டாட்ட வியத்தனிலேபாவ
 ரீனமுறுமீசனுட னிவன்கூடுவனே
லெப்படியுங்கிலேசமுறும் பந்து னக்கலக
 மிசைபுத்தியாதியிலே யதிகஷ்டமுண்டாஞ்
சொற்படியேமத்திபமந் தியத்தினிலேகஷ்டந்
 தொலைந்துவிடும் பரதேசசஞ்சாரமுண்டாம்

மைப்படியுங்குழலாளே மூன்றுபத்துலாபம்
வதிந்திருந்தா லதன்பலனை வகுத்துரைக்கக்கேளே. 3

வகுத்துரைக்கிற்தனதான்யம் வஸ்திராபரணம்
வருமரசசன்மான மிகவுண்டாம்மற்றுந்
தொகுத்திடுகேந்திரகோணத் தானமதிலிருந்தாற்
சொர்ணலாபத்துடனே சுகமதிகத்திடமும்
மிருத்துவருமாசாபி மானமிகவுண்டாம்
விவசாயத்தாற்றுன்ய லாபமிகச்சேருஞ்
செகத்தினிலேசட்டாட்ட வியத்தானத்திரவி
சென்றாலும்பாவியுடன் கூடினுங்கேள்பலனே. 4

கூடாதமனஸ்தாப மதிகபயமுடனே
கொடிதானநீரிழிவு சரீரமதிற்பீடை
வாடாதவாசாரந் தனநாசமாகும்
வருங்கிரகம்பேர்ந்துவிடு வாக்கேழுக்கிவனே
ஈடாகுந்திசைநாத னுகிலதிசுரமு
மிசைந்தகலைவிசர்ப்ப பயமுமிகவுண்டாஞ்
சோடாருந்துணைமுலையாய்ப் பரிகாரமதற்குச்
சூரியனைநமஸ்காரம் பண்ணிவரிற்சுகமே. 5

ஆக விருத்தம்-159

## செவ்வாய்திசை சந்திரபுத்தி

பண்ணியசேய்திசையதனிற் மதிபுத்திமாதம்
பகர்ந்திடுமேழதுதனிலே பலனதுதான்சொல்லக்கேள்
நண்ணியதோர் சேய்தனக்குச் சசியந்தர்க்கதனாய்
நணுகிடினுமுச்சசொக்ஷேத் திரலாபம்பெறினும்
புண்ணியகேந்திரகோணந் தன்னையடைந்தாலும்
புகழ்சுபரால்நோக்கமுற்றுப் பெலவானுயிடினுந்
திண்ணமிருமவன் புத்தி யாதிலேபுண்ணிய
தீர்த்தமுடன்றேவதா தெரிசனமுண்டாமே. 1

மேலாகுமரசாலதிகசம்பத் துண்டாம்
விவாகமுடன்புத்திரவுற் பத்திமிகவுண்டாகுஞ்
சேலாருந்தடாகமா லயப்ரதிட்டைசெய்வன்
சிதேவிகிருபைமிகுஞ் செகராசர்சவுக்கியம்
பாலாருமொழிகளத்திர புத்ரமித்ரசுகமாம்
பால்பழத்தோடனம்புசிப்பன் பார்த்திபர்களாலே
மாலாருங்கேடில்லைசுபலாபமுண்டு
வடிவாளைப்பழித்தவிழி மங்கையருக்காசே. 2

மங்கையேவளர்மதிய மாகிடிற்பல்நூல்கள்
வாசிப்பும் பூமிக்கு மன்னவனுமாவான்
பொங்கமுள்ள வடதிசையிற் பிரயாணஞ்சென்று
பூமன்னபேட்டி தன்னிற் புகழுமிகவுண்டா
மிங்கிவன்றனீசனுய்ச் சட்டாட்டவியத்தி
லிசைந்திருந்தாற் பித்தனுய்த்தேகமுறுநாசம்
பங்கமுறும்பசுத்தான்ய மாசர்சோராக்னி
பயமுமிகவுண்டென்னே பகர்ந்தனர்தேன்மொழியே. 3

தேனனையமொழிமாதே பவருடன்லாபத்திற்
சேருமதிப நியுடனே கூடிடுவானுகில்
ஞானமுறும்பொன்னவனுற் பார்க்கப்பட்டாலும்
நலமுடனே கூடிடினும் ராச்யமிகலாபம்
ஆனதொருசந்தனமுஞ் சுகந்தபுஷ்பலாபம்
ஆலயமுந்தடாகமுடன் பிரதிட்டையுடனே
தானமிகுபுண்யதரு மங்களெல்லாஞ்சேருந்
தானானுர்பூசைசெய்வன் றூரணியில்மாதே. 4

தாரணியிலேயதிகேந் திலாபத்தேனுந்
தருமிரண்டாமிடத்தேனுஞ் சார்ந்திருக்கிற்சவுக்யம்
காரணமாந்தான தன்ம மிகலாபங்கல்வி
காவியங்கள்மிகப்பழகுஞ் சிவிகைவஸ்திராபரணம்
வாரணமுமிகலாபந் தளகர்த்தனுக
வருமெடுத்தகாரியமு மதிகசெயமாகும்
பூரணமாம்வித்தையது பிதுர்சவுக்கியமாகும்
பூங்கொடிபோலிலங்கு மிடைபொற்கொடிமின்னுளே. 5

பொற்பில்லாச்சட்டாட்ட வியந்தனிலேபாவி
பொருந்துச்சியுடன் கூடி தேகசுகமுடனே
நற்புவிசேர்மன்னராற் கோபமுண்டாம் பயித்தியம்
நண்ணிடுமேனுவியாதி யாதிபுகதிதனிலே
யற்புதமாஞ்சோபனமத்தியிற் சவுக்பமுண்டா
மந்தியத்தி லவமிருத்து பயம்பரிகாரந்தான்
விற்பொருதும் நுதலாளே ஒருமையுளமனனுய்
விநாயகர்க்குப்பூசைசெய்ய மிகுசுபமுண்டாமே 6

ஆக விருத்தம் 165.

---

## இராகுதிசைப் படலம்

சுகமானராகுதிசை யாண்டுபதினெட்டிற்
சொற்பலன்கேளாயிதினிற் சர்வாங்கரோகஞ்

செகமீதுசித்தமது பிரமைகொள்வன்றுக்கஞ்
சேர்ந்திடுமேசத்துருவாற் பீடைமிகவுண்டாம்
அகமதினூற்பாவமது செய்திடுவன்மிடியு
மடைந்திடுவன் மூன்றூறு தசலாபத்தேனு
மிருமேதானுச்சத்தில் ராகுவிருந்தாலும்
வியன்பலனைச்செப்பிடுவேன் மேன்மைபெறுமாதே. 1

மாதேகேளதிகசுபம் ராச்யமதுலாபம்
வளர்புத்ரகளத்ரமுடன் வஸ்திராபரணந்
தீதேதுமில்லாத விவசாய மதனூற்
சேருமேகவதான்ய லாபமிகவுண்டாங்
கோதாகுமுன்சொன்ன தானங்கள்தவிரக்
கூறுமற்றத்தானமதி னீசனுயிருக்கும்
போதேதான்கட்டபலன் மயித்தியங்குன்மங்கள்
புகலரியக்ஷயரோகம் பொருந்திடுமென்றுரையே. 2

உரையாருந்திசையாதி தனிலரசர்பயமு
முறுதீயாற்சோரராற் பயமிகவுண்டாகு
நிரையாகுமத்தியினிற் றனலாபங்கடையில்
நித்தியமாய்ச்சவுக்கியமும் பெருகிவருமதனிற்
றூன்கடையில்விலங்குடனே யதிகபயரோகங்
குரையாததேகமதிற்பீடை மிகுந்தனமுங்
குறைந்துவிடுமென்றுலகிற் கூறினர்கற்றோரே. 3

ஆகவிருத்தம்-168

---

## இராகுதிசை ராகுபுத்தி

உலகில்மிகுராகுதிசை தனிற்றனதுபுத்தி
யுறுமாதமுப்பத்தி யிரண்டனுளீராற்
பெலமுடையோன் புத்திவரும்போதுதாற்காலி
பிரபலமாங் களத்ரமுடன் றனதான்யநாசம்
நலமில்லாச் சத்துருவி னூற்பீடைபயமாம்
நாடியேவாதபித்த வயிற்றுவலியுடனே
சொலவரிய பரதேசஞ் சஞ்சாரமுண்டாஞ்
சுயகிரகம்பேர்ந்து விடுஞ்சுகமில்லைதானே. 1

தானுனகடகமதில் ராகுவிருந்தாலுந்
தனித்திடுமென்னியராசி யடைந்திருந்தாலுந்தான்
காணுருமாடிமனை வஸ்திராபரணக்
காசினியில்விவசாயந் தனதான்யலாபம்

ஆனாலுமரசர் வெகுமானமதி கீர்த்தி
யதிகதனகர்த்தமுடன் புத்திலாபமுமாந்
தேனுருமொழியாய்கேள் தாயாதிசத்துரு
செயசிவிகையுடன்குடக்குத் திசைபயணங்கூறே. 2

கூறியமூன்றாறுபத்துப் பன்னொன்றிலாச
குணமுடையசுபருடனே கூடினும்பார்த்தாலும்
வீறுசெறிசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
வியனேழொன்பதுதனிலே மேலும்லக்கினத்திற்
றேறியதுரவியுடனே கூடியிருந்தாலுந்
திகழுமவன்புத்தியிலே கட்டபலனுடனே
நாறுமலர்ப்பூங்குழலாய்த் தனநான்யநாசம்
நற்கிரகம்பேர்தல்பிதுர் மாதுர்கட்டமுறுமே. 3

கட்டமுறுமனவ்யாதி புத்திரர்நாற்காலி
கனநாசம்பந்துசனஞ் சீவனுறுநாசம்
நட்டம்வருந்தலைவலிநோய் சுரம்விலங்குண்டாகும்
நாடியதோர்கருமவிக்ன நாசமுறுந்தார
மிட்டமிகுகேந்த்ரதிரி கோணலாபத்தி
லிசைந்திடினுமுச்சசொக்ஷேத் திரமடைந்தாலுந்தான்
மட்டவிழ்பூங்குழல் மடவாமதன்பலனைத்தானே
வகைவகையாயுரைத்திடக் கேள்மான்விழிமின்னாளே. 4

மின்னிடையாயதிகசுகம் ராசமூலத்தால்
மிகுகிராமபூமிவரும் விளங்குமிட்டதெய்வம்
தன்னையுமேபிரார்த்தனைசெய் திடுவனிசைகிரகந்
தன்னிலேதிழுவாழுந் தனித்தபுத்ரபீடை
பின்னுமேமாதுர்மதி நாசமுமுண்டாகும்
பேசுமிரண்டேழிலிருந் தாற்றாரநாசஞ்
சொன்னதொருபரிகாரந் துர்க்கைதனைப்போற்ற
துயர்தீர்ந்துசுகமுண்டாஞ் சொன்னபடிதானே. 5

ஆக விருத்தம்-173.

---

## இராகுதிசை குருபுத்தி

தானமுறுமிராகுவினிற் குருபுத்திமாதந்
தானிழிபத்தெட்டோ டீருபத்துநாலா
மானபலன் ராகுவுக்குக் குருவந்தர்க்கதனு
யாயிடினுங்கேந்திரகோ ணத்தையடைந்தாலும்
ஈனமில்லாலாபருச்ச சொஹேத்திரந்தன்னி
லிருந்தமுச்சாங்கிசஞ்சுபாங் கிசம்பெற்றாலுந்தான்

தேனையுமுப்பழத்தினையு மொன்றாகச்சேர்த்து
திரட்டியசேற்றினில் முளைத்திசெழுங்கருப்பன்றானே. 1

பன்றாநபாணனொடு மால்மறையோன்பூசை
பண்ணிடுவன்பட்டாபி ஷேகமதுசேரும்
நன்றாகீகமிகு கீர்த்திசத்ருநாசம்
ராஜயோகம்ராச கிரகத்தில்வாச
மென்றாளுஞ்சிவிகைவரும் பால்பாக்யமுண்டா
மிசைகுடக்குத்திசைநிருதி மூலையில்மன்னவரா
லன்றாளிற்பிரயாண மதிற்கார்யங்கூடு
மரியபுண்யதீர்த்தமெல்லா மாடிடுவன்மாதே. 2

புண்ணியவானிவன்றனக்கு வெகுகிராமலாபம்
போசனங்கள்சவுக்கியமாம் புகழுமிகவுண்டா
மெண்ணமிகுகுருவஸ்த மனஞ்சத்ருவீட்டி
லிருந்தாலுஞ்சட்டாட்ட வியத்திலிருந்தாலுந்
தண்ணியகோள்கூடுகினு மவனொக்குற்றாலுஞ்
சதாவேளைபாவத்தில் மனமிகவேசெல்லும்
நண்ணியதோர்தன தான்ய புத்ரகளத்திரமும்
நாசமுறுராசகாரிய நாசமாமே. 3

நாசமுறுங்கிரகமதில் மார்பினிலேநோயாம்
நலமில்லாமனநோயி தானுமிகவுண்டு
வாசமதாய்க்கேந்திர கோணத்திலிருந்தாலும்
வாக்கினிலும்பதினொன்றி லேனும்வதிந்தாலும்
பேசரியகிரகஷேத்திரம்வஸ்திராபரணம்
பெற்றிடுவனல்லபோ சனம்புசப்புண்டாகும்
மாசிலாத்தேகவாரோக்ய புத்ரகளத்ர
வர்த்தனையோடே சிவிகை வந்திடும்பெண்ணரசே. 4

வந்திடுமேசிறிதிடத்திற் கவுக்கியமாமதிலே
வருங்கடையிற்திரவியநாசமும் ராசகோபந்
தந்திடுஞ்சட்டாட்டவியந் தன்னிலேபாவி
தன்னுடனேகூடிநிக்கிற் றனநாசமுண்டாம்
மூர்த்திவருமரசால் வெகுகலகஞ்சத்துரு
முழுவிரோதம்மிகுந்த விடஞ்சேத்ரநாசந்
தொந்தமுறுங்குளிர்காச்சல் முன்பாதிதனிலே
சுகமுண்டாம்பிற்பாதித் தூயமொழித்திருவே. 5

திருவேகேள்சுபனுடனே குருகூடுமாகிற்
றினலாபமுச்சமொடுசாகேஷத் திரத்திலிருந்தாக்காற்

குருபூசை சிவபூசை மேலோர்கள் நேசங்
கூறுசகோதரசுகமுங் குடும்வஸ்திரா பரணங்
நரவாகனங்கிடைக்குங் தளகர்த்தனுவன்
நற்புத்தியா தியில் புண்ணிய தீர்த்தஸ்த்தானம்
வருமேயிற்பா தியிலே தனச்செலவுண்டாகு
மதத்தெழுந்து புடைத்துவிம்மிவளர்தனப் பெண்ணரசே. 6

அரசனிரண்டேழினுக்கு நாதனுயிருந்தா
லதிகதலையிடி காச்சலநுசேருமதற்குப்
பரிகாரமொரு மனதாயீசனுக்குப்பூசை
பண்ணிவிடத்தோசம்போய் பால்பாக்கியத்துடனே
வருமேயின்ன திகசவுக்கிய மிகவுண்டாகி
வளர்ந்திடுவ னிளந்தளிரை வாட்டிடுமென்பதஞ்சேர்
திருவேநல்விளமயிலே கணிதமாராய்ந்தோர்
செப்பினர்களிப்படியே செகதலத்தின்மீதே. 7

ஆக விருத்தம்-180.

---

## இராகுதிசை சனிபுத்தி

தலத்திலே ராகுதிசைகாரி புத்திமாதந்
தான்முப்பானுவுடனே நாளாறுதன்னில்
நலத்திலோராகுவுக்குக் காரியக்தர்க்கதனுப்
நண்ணிடினுங் கோணகேந்திர சொட்சேத்திரத்தில்
பலத்தமிகுமூலத்ரி கோணத்திலேனும்
பதிந்திடில் மூன்றாறுபத்துப் பதினொன்றிலேனும்
பெலத்திருக்கிற்காரி கொடுத்திடும் பலனையிதமாய்ப்
பேசிடக்கே ளமூர்தாசம் பிளனுமொழித்திருவே. 1

திருவாழும்சாச்யமிகச் சேர்ந்திடுமேசிவிகை
சேரும்விவாகஞ் சேருமதிகசுகஞ்சேருந்
தருமாதிபுண்ணியங்கள் தான்வந்துசேரும்
தானேபூந்தோட்டமுடன் விபசாயஞ்சேரும்
வருங்கூபந்தடாகப்ர திஷ்டையதுசேரும்
மன்னராற்புவிசேரும் மன்னவரால்லாபம்
பொருவேலைவடிவாளே மதன்பாணமதனை
பொருதுவென்றகடை விழியாய்புகன்றனர் முன்னேரே. 2

முன்னனசுபக்ரகத் தொடுங்காரிகூடில்
முதியலக்கினதிப தியுடன் கூடிலேனுஞ்
சொன்னலாமிடத்துடை யோனுடன்கூடிலேனுந்
தோய்ந்தஇலக்கனம் பத்தோ னுடன்கூடிலேனுஞ்

நன்னுகரீகமொடு களத்ரபுத்ரவர்த்தனை
நற்புத்திசாதியிலே கள்ளர்சர்ப்பபயமும்
மின்னுருமாயுதத்தால் வெகுபயமுமுண்டாம்
வெற்பினையும்பொருதுசெய மேவுமூலமயிலே. 3

மேவியதோரபகாரக் கடையினிலேதனந்தான்
மிக்லாபமதிகசவுக் கியமிகவுண்டாகும்
நாவலர்கள்சொலுஞ் சுக்கலபட்சத்துசசிபோல்
நாளுக்குநாளதிக மாநிதியஞ்சேரும்
ஆவலருஞ்சப்ரமஞ்ச மதுசேறும்பின்னே
அதிகசுகமரசசன்மா னங்களுடன்பூமி
கோவரசர்பேட்டிவஸ்தரா பரணமிகலாபம்
கொடுக்குமெனக் கற்றுணர்ந்தோர் கூறினதிப்படியே. 4

படிமீதிற்பெண்பிறக்கும் விபசாயத்தாலே
பலதான்யலாபமுறும் ராசகாரியத்தில்
வடிவாகுமேற்றிசையிற் பிரயாணமாகும்
வந்ததன்புராசசன்மா னத்துடனேகிராமம்
நெடிதானபூமிமிக லாபமு முண்டாகும்
நீங்காதகளத்ரமுடன் புத்திரருமுண்டாம்
அடியாகுமிடைமயிலே கெணிதமாயராழ்ந்தோர்
சொன்னபலன் சமுசெயம் வராதெனச்சொல்வாயே. 5

சொல்லியதோர்நீச க்ஷேத்திரத்திலிருந்தாலுந்
தோன்றியவர்சட்டாட்ட வியத்திலிருந்தாலும்
வல்லதொருசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
வாக்குத்தானந்தனிலே பதிந்திருந்தாலேனும்
நல்லதொருமன்னராற் கோராற்றீயால்
நலிங்குபயம்புத்ர களத்திரநாசமாகு
மெல்லவருந்தலைபிடியுஞ் சுரத்துடனேக்ஷயமு
மிகுந்தேசாந்தரகெமன முண்டாமென்றுரையே. 6

உரைத்தவிடம் பந்துசனநாசமுமேயாகு
முற்றிடுநாற்காலியினுஞ் சீவனுக்குநாசந்
தரைத்தலத்தையாளுமன்னர் வெகுகோபஞ்செய்வர்
சார்கோணகேந்திரத்திற் சனியிருந்தானே
நிரைத்தமூன்றென்பான் பன்னொன்றிலேதானும்
நீங்காதபாவியுடன் கூடியிருந்தாலும்
வரைக்கிணையாய்புடைத் தெழுந்து வளர்ந்ததனமயிலே
வரும்பலனை வகைவகையாய் வகுத்துரைசெய்வோமே. 7

செய்யதொருகளத்ர புத்ர நாசமிக வுண்டாந்
திகழ்புத்தியாதியிலே யதிகசவுக்கியமாம்
வையகத்தையாளுமன்ன ரபிமானமந்த்யம்
வரும்நடுவிற்சுபாசுபங்கள் வகுத்திடுமேந்தியத்திற்
றுய்யதொருமன்னரால் வெகுகோபமுண்டாஞ்
சொற்கிரகப்போர்ந்துவிடு மனவ்யாதியாகும்
பையரவின்மணிமுடியைப் பழித்தவல்குற்றிருவே
பாராசரமாமுனியுரைத்த பலனுமிதுவாமே. 8

இனிதான விபசாயத் தாற்றுன்யநாச
மெதிர்த்துவரும் பயித்யமதில் மாணமிகவுண்டாம்
அனியாயமபகீர்த்தி யான துக்கம்பந்து
அடுத்தடுத்துநாசமுறு மாதீராறெட்டில்
வனிதாய்கேள்பாவியுடனே கூடுதானேல்
மார்பிலுறுரோக முடனவமானஞ்சேரு
மனராலுங்களராலு மக்கினியாலுந்தான்
வரும்பயமுமோசயங் குன்மமுமுண்டாமே. 9

உண்டாகும்வயிற்றுவலி சிரரோகமுடனே
யொருவேளை யகாலமதிற் கெட்டபோசனமா
மண்டாதகோபமுறு மரசருடன்சேர்வா
னதிகரோய்பந்துபகை யாகிவிடுமப்பால்
ரெண்டேழுக்கிவனுதனுகிடில் மந்தியத்தில்
நீங்காதகுளிர்காச்சல் குன்மம்வருமதற்கு
வண்டாருங்குழல்மடவாய் பரிகாரமதுதான்
மகேசுரனைப்பூசை செய்யமாறிவிடுந்தானே. 10

ஆக விருத்தம்-190

---

## இராகுதிசை புதன்புத்தி

தானனராகுதிசையது தனிலேபுத்தி
தனித்தபுத்திமாத முப்பானுள்பதினெட்டுந்த
கோனனராகுவுக்குப் புதனந்தர்க்கதனுய்க்
கூறுமுச்சசொஷேத்திரம் பாக்கியத்தானத்தில்
மானேகேள் திரிகோணம் வாக்குலாபத்தில்
வந்திடினும்பார்த்தாலு மதிலாபமாகு
மானுலுந்தனதானிய நாற்காலிலாப
மவன்றனக்குக் கலியாணமாகுமடமயிலே. 1

ஆகுமேதனதான்ய மதிகசவுக்கியமு
மானநல்லபோசனமுங் களபமுதற்புஷ்பம்

வாகுபெறு மலங்காரங் கட்டிவிலேசயன
மாதர்களைக்கலவிசெய்வன் வளர்சுபனோடேதான்
யோகமுறக்கூடிடினுஞ் சுபனூர்பார்த்தாலு
முறுபுதல்வாகளத்திர லாபம்மதிவித்தை
தோகையேகட்டிடமும் புண்யதர்மலாபந்
தொகுத்தமேதசாதிபத்யஞ் சிவிகையுந்தான்வருமே. 2

மேதினியிற்சட்டாட்ட வியத்திலிருந்தாலும்
விளங்குபுந்திசூரியனாற் பார்க்கப்பட்டாலு
மோதரியகளத்திரத்தாற் கலகமாரகத்தோ
டுற்றதனச்செலவுபந்து வுபகாரஞ்செய்வார்
நீதிலாக்கோணகேந்திர லாபத்தானஞ்
சேர்ந்தாலும்நல்லபோசனமதிகசவுக்யம்
பூதலத்தில்விபசாயந் தனதான்யலாபம்
பொருந்தவாகனமும்வரும் பூவைபருக்கரசே. 3

பூமியிலேதடாகமுட னாலயப்ரதிட்டை
பொருந்தியிடுங்கிராமமுடன் பூமிமிகலாபந்
தாமதமாஞ்சட்டாட்ட வியத்திலிருந்தாக்காற்
சண்டைவரும்விலங்கு வருந்தனையர்குருநாச
மாமிரண்டேழுக்குடையோ னாகியவனிருந்தா
வருமிருத்துதோஷமுண்டா மதிற்பரிகாரங்கேள்
நேமமுடன்சிவபூசை செய்ததோஷமகன்று
நீங்காதசுகமென்று நிகழ்த்தினர்கற்றோரே. 4

ஆக விருத்தம்-194.

---

## இராகுதிசை கேதுபுத்தி

தினகரன்றன்பகைத்திசையிற் கேதுபுத்தியதுதான்
சேர்ந்திடுமேயோராண்டு நாள்பதினெட்டதிலே
பனகமதற்கந்தர்க்கதனுக் கேதுற்றாலும்
பயித்தியமு மாசபயந் தலைவலியுஞ்சுரமும்
மனநடுங்குங்குளிர்காச்சல் நேத்ரவியாதியுந்தான்
வருந்தாரம்புத்திரர்கள் நாசமிகக்காட்டுஞ்
சொன்னதொருநாற்காலிகளின் சீவனுக்குமோசஞ்
சொல்லிடக்கேள்பாராசரர்முன் சொன்னமொழிப்படியே. 1

சொன்னதொருவாகனத்தா னத்துடையோனுடனே
சொற்கேதுசேர்ந்தாக்காற் சிவிகையதுசேரும்
நன்னயமாய்ச் சுபக்கிரகத்துடன் கூடினாலும்
நட்டமுறுஞ் சுபராலே பார்க்கப்பட்டிடிலோ

மன்னர்சன்மானமுடனதிக சவுக்கியமாய்
 வருமதிகசுபம்புத்திர லாபமுந்தான்கொடுக்குங்
கன்னலின்பாலுடன்றேனைக் கலந்ததுபோல்ருசித்துக்
 கழியுமொழிமடமயிலே கருதினர்கற்ருரே. 2

கருதரியசட்டாட்ட வியந்தனிலேகேது
 கலந்திருந்தாற்சுயமானங் காணலாமிரண்டில்
வருகேதுவிருந்தாக்கால் விஷபீடைமூன்றில்
 வந்திருந்தாற்கந்தையுடுத் துவனென்பானுகி
லரியபிதுர்நாசமவரு நாலிருப்பானுகி
 லவன்மாதுர்நாசமுறு மாறுபத்துமூன்றில்
பிரியமுடனிருப்பானே லதிகசவுக்கியமும்
 பெருத்ததனலாபமுந்தான் பெற்றிருப்பன்மாதே. 3

பெற்றிருக்குமுச்சமுற்ரு விராச்யதனதான்யம்
 பெரியநரவாகனமும் பெறுவன்பாலனமும்
உற்றிடுபோசனமுண்டாங் கேந்திரகோணத்தி
 லுற்ருலுமூன்றினிலே யுறைந்திருந்தாலுந்தான்
குற்றமில்லாச்சுபாசுபமும் விபசாயங்காலம்
 கூடிவருமந்தயத்திற் கட்டபலன்கொடுக்கும்
நற்றமிழோருரைத்தபடி சட்டாட்டவியத்தில்
 நவில்பாவியுடனிவன்ருன் கூடிடிற்கேள்பலனே. 4

கூடுமேதலைவலியுங் குளிர்சுரமும்விஷமுங்
 கொடுத்துவிடும் விபசாயநாசமுறுமும்பின்பு
வாடுமேசர்வபந்து சனபீடையுடனே
 மன்னவர்கள்கோபமுறு மகாசிம்மங்கடகம்
நாடியேயிருந்தாலுந் தேளிலிருந்தாலும்
 நற்களத்ரசண்டையுண்டாம் நாசமவமிருத்து
தேடியேதேசாந்திரசஞ் சாரமுண்டாம்
 தேகசுகக்குறைவுடனே பீடையெனச்செப்பே. 5

வேறு

பீடையாகிடு மட்டமம் பெற்றிடில்
பாடுசேரு மிருத்து பயமதே
கூடுமேசிவ பூசை யினுல்நலம்
நாடுமேசுக மென்று நவின்றிடே.

ஆக விருத்தம்-100.

## இராகுதிசை சுக்கிரபுத்தி

### வேறு

சுகமானராகுமகாதிசை தனிலேதானுஞ்
சுக்கிரனார்புத்தியது மூன்றுண்டாகுஞ்
செகமீதுபாம்புக்கந் தார்க்கதனதாகித்
திருட்டியில்லான்சேர்ந்தானுந் திரிகோணகேந்த்ர
மிகவுறவாயிருந்தாலும் லாபத்தானத்தில்
மேவிடினும்பலவான்க ளுடன்கூடினாலும்
தகவுடையவரசானாற் றனஞ்சேருமேலோர்
சன்மானந்தனையருண்டு சனங்களுஞ்சேர்ந்திடுமே. 1

மேலானசொக்ஷேத்ரந் தன்னிலிருந்தாக்கால்
மிகுத்துவரும்வாகனமும் நற்பலனுங்கொடுக்கும்
மாலானவிவாகம்வரு மிராசசன்மானங்கள்
வருமதிகசவுபாக்கியம் வருங்கிரகம்பூமி
சேவாருமவிழிகளத்திர புத்திருமலாபஞ்
சேரும்நாற்காலினாற் சிவலாபங்கள்
பாலாருமொழியாய்கேள் மங்களசோபானம்
பலத்திடும்பார்நற்பலன்கள் பங்கயப்பெண்ணரசே. 2

பங்கமிகுசட்டாட்டவியந் தனிலேகவிதான்
பதிந்திடினுமங்கிசத்திற் சந்திரனுடனே
துங்கமுறக்கூடிடினுங் காரணமாய்ச்சண்டை
சொல்லுமிக்கதிரேகமதில் ரோகமிகவுண்டாம்
தங்குகளத்திரபுத்திர நாசமதுசேருந்
தன்னரசன்பகையும்வெகு கட்டமும்முண்டாகும்
பொங்கமுறுந்தாயாதி தனிற்கலகமுடனே
புகழானபந்துசன பீடைகளுண்டாகும். 3

பீடையில்லாத்திரிகோண கேந்திரத்திலேனும்
பிலத்துவருமூன்றுமொன்பது பதினொன்றேனும்
நாடியதோர்சுபயகிரகத் துடன்கூடியிருக்கில்
நற்கிரகப்பிரவேச நாற்காலிலாபங்
கூடிவரும்ராச்சியத்தோ டன்ன வஸ்த்ராபரணக்
குடைசுருட்டிசாமரமும் புத்திருமுண்டாந்
தேடுபுகழாசரினால் நினைத்ததுகைகூடுந்
திகழ்பந்துநன்மைகுட திசைப்பயனஞ்சொல்லே. 4

சொல்லுவாய்சட்டாட்ட வியந்தனிலேயிருந்து
சொலும்பாவியுடன்கூடி லரசர்சோராக்னி
மல்லாரும்பயமுடனே நீரிழிவுரோக
மதிற்குன்மரோகமுடன் பருவிலங்குநூனும்

நல்லதொருதலைவலியு மகாலபோஜனமும்
நாடியவாக்குடனேழுக் கிவனுதனுகில்
வல்லமைசேரவமிருத்து தேகபயமுண்டாம்
வறியோராயறிந்தவருக் கனதானஞ்செய்யே. 5

ஆக விருத்தம்-205.

---

## இராகுதிசை சூரியபுத்தி.

செய்தவொருராகுதிசை தனிலிரவிபுத்தி
சேர்மாதம்பத்துடனே நாள்மூவெட்டாகுந்
துய்யதொருராகுவினுக்கந்தர்க் கதனுயிடினுஞ்
சொக்ஷேத்ரவுச்சகேந் திரத்திலிருந்தாலும்
வையகத்திலிரண்டஞ்சோன் பானிலிருந்தாலும்
வருஞ்சுபனோடேகூடிச் சுபன்பார்த்திட்டாலு
மையிலகுவிழிமடவாய் தன்பலனைத்தானே
வகுத்துவகைவகையாக வழுத்திடுவன்கேளே. 1

வழுவில்லா அரசனுட சன்மானங்கீர்த்தி
வருமற்பசவுக்கியமுஞ் சுபாசுபமுமுண்டாம்
பழுதிலாச்சொற்பராக் கியலாபமுடனே
பதிகளத்ரபுத்ரரும்வர்த் தனையுமுண்டாந்
தழுவியிலக்கினமொன் பதாமிடத்துக்குடையோன்
றனைக்கூடிகுருசசியாற் றுன்பார்த்திட்டாலு
முழுமதிசேர்முகமுடைய ராசாபிமான
முத்துரத்னக்குடைலாப முற்றுமுண்டாயிடுமே. 2

உண்டாகும்ஸ்திரீமூல மாசர்மூலத்தா
லுற்றிடும்பூலாபமொடு கெசமசுவஞ்சிவிகை
கொண்டிடுவனுச்சசொ க்ஷேத்ரத்தானமாகக்
குறித்தமூன்றுபத்துப் பதினொன்றிலிருக்கில்
விண்டாலுமனேகவிதப் பலன்களுமுண்டாகும்
வியமாமெட்டாமிடத்தில் மிபமாவியுடனே
வண்டாருங்குழல்மடவாய் கூடினுந்துற்பலமாய்
வதிந்திரவியிருந்தாலும்மற்றுங் கேள்வகுப்பாய். 3

வகுத்தவொருதிசைநாத னுடன்புத்ரநாதன்
வரும்பாவியாயிருக்கிற் கர்மாதிரோகஞ்
செகத்தினிலேசோரர்பய மரசர்நிட்டூரம்
ஸ்திரீகலகம்கிரகம்போஞ் சத்துருபயமுண்டாந்
தொகுத்துரைக்கிலரசர்சோ ராக்னிபயஞ்சேருந்
தோன்றும்பற்பலர்கலகங்க ளத்திரபுத்திரநாசம்
பகுத்துபருவிலங்குடனே பீடைசகோதரங்கள்
பந்துசனதனநாசம் பகர்ந்திடுபூங்கொடியே. 4

திடமானகேந்திரகோ ணத்தையடைந்தாலுஞ்
செப்பரியமூன்றுபதி னொன்றிலிருந்தாலும்
அடைவானராசசன்மா னத்துடனே தக்க
அவனிவரும் புத்ரகளத்திர சுகமுண்டாகும்
இடமாகுமிரண்டேழுக் கிவனதிபனாகி
யிகலுமவமிருத்து பயமிட்டசனவிரோத
மடவாரேசேய்பார்த்தாற் பெரியோர்கள்பகையும்
வருகுமினுஞ்சிலதீதுறுவன வகுத்துச்சொல்லே. 5

ஆக விருத்தம்-210.

---

## இராகுதிசை சந்திரபுத்தி.

சொலும்ராகுதிசைதனிலே சசிபுத்தியிதுதான்
றோன்றிவரும்பதினெட்டு மாதமதுதனிலே
நலமாகும்ராகுக்குச் சசியந்தர்க்கதனாய்
நண்ணிடினுமுச்சசொக்ஷேத் திரத்தையடைந்தாலும்
பெலமான திரிகோண கேந்திரலாபங்கள்
பெற்றாலும்சுபனோடே கூடியிருந்தாலுங்
குலராசரபிமானஞ்சிவி கைவஸ்திராபரணம்
கூறுபுத்ரலாபமெல்லாங் கூடிடும்பெண்மயிலே. 1

கூடியதோர்பூரணசந் திரனாதியிருந்தாற்
குறையாதபாலன்னம் லாபமிகவுண்டாங்
தேடரியகெசமசுவ லாபம்நாற்காலி
சேர்தான்யலாபமொடு களத்ரபுத்ரலாப
மூடனுறுஞ்சட்டாட்ட வியந்தனிலேபாவி
யுடன்கூடிச்சீரணசந் திரனானாகிற்
றோடவிழும்பூங்குழலாய் களத்ரபுத்ரநாசஞ்
சொலும்பூமிபிதுராநாசந் தோன்றிடுமென் றுரையே. 2

நாசமில்லாத்தேன் திசையிற் பிரயாணமாகும்
ராசாக்கள்பேட்டியுறும் நாற்காலிலாபம்
பேசரியநற்கிரகலாப மிகவுண்டாம்
பின்னஞ்சுபன்னொன்று மிடமதிலுமற்றுந்
தோஷமில்லாக்கேந்திரத் திற்றானிருந்தபோதுஞ்
சுயகிரகமதுதனிலே சீதேவிசேருங்
காசினியில்நினைத்ததெல்லா மதிலாபமாகுங்
கருதரியதனஞ்சேரு மதிகசுகமாமே. 3

அதிகீர்த்தி யுடனரச சன்மான முண்டா
 மானதெய்வ பூசனைக ளதுமிகவுஞ்செய்வான்
மதியாதசோரரால் ரணத்தினல்மரணம்
 வாக்கேழுக்கிவனுந னுகிலவமிருத்து
விதியாகும்பரிகாரம் நவக்கிரகமதனை
 மெய்யுடனேனிதம்பணிய விலகுமிந்ததோஷம்
கதிசேருமான்குளம்பை யாவபடமதனைக்
 காய்ந்தமதபீடமெனக் கணிக்குகல்குற்றிருவே. 4

ஆக விருத்தம்-214.

---

## இராகுதிசை செவ்வாய்புத்தி

திருவேவகே ளாயரவு திசையதனிற் செவ்வாய்
 சேர்ந்தபுத்தி வருடமொன்று நாள்பதி னெட்டாகும்
பரிவாகச் செவ்வாய்ரா குக்கந்தர்க்கதனுப்
 பதிந்தாலுங் கேந்திரகோணந்தை படைந்தாலும்
பெரிதானவுச்சசொக்ஷேத் திரலாபம்பெறினும்
 பெலவானுயிருந்தாலுஞ் சுபாங்கிசம்பெற்றிடினும்
அரிதானசுபருடனே நோக்குறினுமூன்றில்
 ஆறுபத்திப் பதினென்றி லிருந்தாலுங்கேளே. 1

ஆனதொரு சவுக்கியமாம் யோகமுடன்பூமி
 ஆதாய மதிகபல னுற்நாலிசேருங்
கோனவன்றன்பேட்டிவருந் தேவப்பிரசாதங்
 கூடிவருமதிசவுக்கியம் வஸ்த்ராபரணங்
தானம்மிகுபுத்திரலா பம்பெருகுமுயர்ந்த
 தன்மனையிற் கலியாண சோபனமுமுண்டா
மீனிலையும் வாளிலையும் வேலிலையும் பழித்து
 விளங்கியகா தோடுவாதா டும்விழிக்குயிலே. 2

வாதாடுஞ் சட்டாட்ட வியந்தனிலேபாவ
 வர்க்கமுடன் கூடியேயீசனுயிடினுக்
கிதாருங்களத்ரத்தாற் வெகுகலகமுண்டாஞ்
 சேயுடனேகளத்திரமும் வெகுநாசமாகும்
மாதேகேள்பரதேச சஞ்சாரஞ்சமரில்
 வந்துவிடுஞ் செயங்களது காரியுடன்கூடில்
ஏதேனுங் காரியினல் நோக்குற்றாலுந்தான்
 இசைபுத்திர நாசமுண்டா மாவபங்கமாமே. 3

மேதினியிற்கேந்திரகோணத்தையடைந்தாலும்
விளங்கியமூன்றென்பதிலே வீற்றிருந்தானேனும்
ஓதரிய பூமியற்ப லாபமதுவாகும்
உயரரச ரபிமானஞ் சோபனமுஞ் சேரும்
நீதமுறும் பரதேச சஞ்சாரங்களிலே
நீதிமன்னர்பேட்டியது நிதநிதமுண்டாகுஞ்
சூதினையுமருப்பினையும் பொருப்பினையும்பழித்துத்
துத்திப்படர்ந் திலகுமுலைத் தூயமதரதியே. 4

தூயதொரு சட்டாட்ட வியந்தனிலே செவ்வாய்
சொலும்பாவியுடன் கூடில்களத்ரபுத்ரநாச
மாயதொரு சகோதரநா சம்பத்துவிரோத
மானகளத்ரமதனல் வெகுகலகமுண்டாந்
தீயதனுலரசாற் சோரார் பயமாஞ்
சேர்தன தானியநாச நீரிழீவுஞ்சேருங்
காயமதில்விடதிட்டி பரதேசகமனங்
கலியாணமத்தியத்திற் சவுக்கியமுண்டாமே. 5

வேறு

மத்தியமிரண்டேழுக்கும் வாக்குக்குமதிபனுகிற
சத்தியாயகாலமிர்த்துத் தான்வரும்பரிகாரங்கேள்
சுத்தமாய்நவக்கோள்தன்னை சுற்றிடிற்சுகமாமென்று
பத்தியாய்பராசர்சொன்னார் பகுத்தறிந்திதனைச்செய்யே.

ஆக விருத்தம்-220.

---

## குருதிசைப் படலம்

செயமான வியாழதிசை பதினன்றுண்டாகுஞ்
செய்யதிசையதிற்பலன்கே ளிராச்சியலாபங்கள்
நயமான தருமம்வருந் தனதான்பலாபம்
நலந்திகழ்சொ க்ஷேத்திரவுச்சம் நாடியிருந்தாக்காற்
கயமோடுபரிசிவிகை யதிகாரச்சியமுங்
கதித்துமிகலாபமுறுங் கனசிவிகைசேரும்
வயமானராவாபு டானமுண்டாமென்று
வகுத்துரைத்தார் பராசரமாமுனி வடநூல்தனிலே. 1

வடநூலின்மொழிப்படியே திரிகோணத்தேனுங்
வாக்கினிலாபத்தேனும் வளர்குருவந்துற்றாத்
திடமீறுஞ்சவுக்யமுடன் சிவிகைவஸ்த்ரலாபம்
சிவபூசைதான்புரிவன் சட்டாட்டவியத்தில்
கொடுநீசனுயிருந்தாலதிகதுக்கம்வந்து
கூடுமென்யதேசமதிற் சஞ்சாரமுண்டாம்

படிமீதிற்றன தான்யம் வெகுநாசமாகும்
பாலினையுந்தேனினையும் பழித்தமொழியணங்கே. 2

ஆக விருத்தம்-222.

## குருதிசை குருபுத்தி

கேடிலாவிழாழதிசை தனிற்றன துபுத்தி
கேட்டிடுவாய் மாதமிரு பத்தைந்தினுடனே
ஈடில்லாநாட்பதினெட் டாகுமதுதனிலே
யிசைந்தகுருவுச்சசொஸ்தேஷத் திரத்தையடைந்தாலும்
நாடியேகோணகேந் திரத்தையடைந்தாலும்
நலலபலஞ் சந்தோஷம் ராசசன்மானங்கள்
கூடுமேகலியாணஞ் சோபனமோடில்லிற்
குறித்ததிருவாழுமென்று கூறினர்கற்றோரே. 1

கூடியதோர்சிவபூசை நற்கருமந்தியானங்
குலமன்னர்சன்மானம் நாற்காலிலாபந்
தேறியதோர்வஸ்திரா பரணலாபங்கள்
தேகசவுக்கியமுடனே செல்வமிகவுண்டாம்
சீறியதோர் நீசாங்கிச நீசராசி
சேர்ந்தாலுஞ்சட்டாட்ட வியத்திலிருந்தாலும்
மீறிவருமாசராற் கோபமுமுஞ்சத்ரு
மிருத்தபயந்தாயாதி விரோதமுமுண்டாமே. 2

தாயாதிகலகமுடன் றனதான்ய நாசந்
தனையர்களத்திரப்பிறிவு தானேயுற்றடுமோம்
ஓயாமற்பரதேச சஞ்சாரஞ்செய்வ
னுறும்வாக்கினுடனேமுக் கிவனுதனுகில்
மாயாதவவமிருத்து பயமாகுமதற்கு
வரும்பரிகாரஞ்சொலக்கேள் மனமுவந்தவழை
நோயாளிதனக்களித்த மன்னடைதந்து
நோம்பொருமண்டலஞ்சனிநாள் நூற்றிடநன்றாமே. 3

ஆக விருத்தம்-225.

## குருதிசை சனிபுத்தி

உற்றகுருதிசையதனிற் சனிபுத்தியதுதான்
உரைத்திடுமுப்பதுமாதம் நாட்பனிரெண்டதனில்
அற்றமில்லாக்குருவுக்குச் சனியந்தர்க்கதனுய்
ஆயிடினுமுச்சசொஸ்தேஷத் திரத்திலிருந்தாலும்

மற்றுமூறுகேந்திரகோணத்திலிருந்தாலும்
வருமூன்றாற்பத்துபதி னொன்றிருந்தாலும்
வெற்றிபெறும்வேல்விழியாய் குயில்மொழியாய்பலனை
விபரமுடனேயெடுத்து விளம்பிடுவன் கேளே. 1

விளம்பக்கேள்ராச்சியங்கள் லாபமிகச்சேரு
மிருத்த தனதான்ய வஸ்திராஆபரணமுண்டாம்
வளம்பெருஞ்சிவிகையுடன் நாற் காலிலாபம்
வளர்புத்ரகளத்ரசுகம் மன்னவர்கள்பேட்டி
தொழுங்குடக்குத்திசையதனி லதிகபயமுண்டாந்
தூயதொருதீர்த்தயாத் திரையுமிகபலிக்கும்
இளங்கதிர்சேர்மதிநுதலாய் பராசரமாமுனியும்
இயம்புமொழிப்படிதமிழி லியம்புவன் பூங்கொடியே. 2

இயம்பியசட்டாட்டவியர் தன்னிலிருந்தாலு
மிசையுமஸ்தமனமாகி யிவனிருந்தானேனுஞ்
செயம்புனையாளீசனா யிருந்தாலுந்தான்யந்
திகழ்தனம்புத்திரனாசங் களத்திரத்தாற்கலகம்
வயம்பொருந்துமன்னராற் சோரராற்றீயால்
வருபயமுங்கிரகமதிற் சுபங்களுமுண்டாகுந்
தயங்குமனவியாதியுடன் பருவிலங்குசேருந்
தளதளெனப்பளபளெனத் தயங்குமுலைத்திருவே. 3

வெய்யவன்றன்மகன் புத்தியாதியிலேயாசர்
மிகக்கோபந்தனதான்ய நாசமதுவாகும்
வையகமதிற்றனதான்ய லாபமர்ப்பசவுக்கியம்
வருங்கடையிற்களத்திரமும் பிதிர்நாசமாகுந்
துய்யதொருகேந்திரகோணத்திலிருந்தாலுஞ்
சொலுமூன்றிற்பதினொன்றிலிவ னிருந்தானேனும்
வையகத்திற்றனதான்யம் பூமிபுத்திரலாபம்
வாகாகக்கிடைக்குமென் மதித்துரைசெய்வாயே. 4

மதித்திடுஞ்சட்டாட்டவியந் தனிற்பாவியுடனே
மந்தனிருப்பானாகிற் றனதான்யநாசங்
கதித்திடுமுத்யோகமித்ரு பந்துசனநாசங்
கனபீடையுண்டிரண்டெட் டுக்குடையோனாகின்
அதிற்பலன்கேளவமிருத்து பயம்பரிகாரந்தான்
அரிசகஸ்ரநாமசெப மாங்கிரகசெபமும்
விதத்துடனேசனிநோம்பு மண்டலமட்டிருந்து
மேலுமெளியோர்கன்ன மீய்ந்திடநன்றாமே. 5

ஆக விருத்தம்-230

---

## குருதிசை புதன்புத்தி

அரசனார் திசையதனிற் புத்தியாபகாரம்
ஆனவிருபத்தேழு மாதந்நாளாறின்
உனக்குருவுக்கந்தர்க்கத னுய்ப்புதனானு
முற்றசவுக்கியந்தனலா பங்கள்மிகவுண்டாந்
தரையதனிற்றிசைநாத னேக்கமுற்றானேனிற்
றருசுகமும்ராச்சியமும் லாபமிராசாக்கள்
பிரசாதமகிமையினு லதினைத்த தனைகைகூடும்
பின்புசேர்தனலாபம் பெருகுமெனப்பேசே. 1

பேசியசெவ்வாய்நோக்கம் புந்திக்குண்டாகிற்
பெரிதானகட்டமுறு மிராச்சியமுநாசம்
மோசம்வருந்தனதான்ய விபசாயங்காய்ச்சல்
முழுதானரோகமுண்டுஞ் சொக்ஷேத்திரத்தேனுங்
காசினியோர்புகழ்ந்திடுகேந் திரத்திலிருந்தாலுங்
கருதரியவாக்குலா பத்திலிருந்தாலுந்
தேசுபெறுமேதமல்படர்ந் தழகுபெறுந்தனத்தாய்
செப்பிடுநற்பலன்களெல்லாந் தெளிந்துரைசெய்வாயே. 2

செப்பிடுங்கால்தவறியதோர் ராச்சியமுஞ்சேரும்
செயத்தாலேலாபமுறும் பந்துசனஞ்சுகமா
மொப்பிரியவிவாகமுடன் சுகபலனுண்டாகு
முயர்மேற்குதிசையதனில் மன்னவர்பேட்டியுமே
தப்பிதமல்லாதுநினைத் ததுபலிதமாகுந்
தண்டிகையும்பூமியுடன் மிகலாபஞ்சேரும்
மைப்புலையப்பொருத்துசெபம் படைத்தபூங்குழலாய்
வருமொழிநூற்படிதமிழின் வகுத்தனர்கற்றோரே. 3

வகுத்திடுசட்டாட்டவியத் தானத்திலேதான்
மாபாவியுடன்கூடி யிருக்கினுநோக்குறினுந்
தொகுத்திடும்பாவந்தனிலே மனதுமிகச்சென்று
தூயபொருளதனாலே வெகுசேதமாகுஞ்
செகத்தினிலேபயித்தியமா மனவியாதிவிலங்கு
சேர்கிரகபேயாச்சியுடன் குளிர்சுரமுங்காணும்
மிகுத்ததலைவலியுடனே தனச்சேதமாகும்
வீணையிசைபோலுமொரு மெல்லியருக்கங்சே 4

வினையுடையவன்கோண கேந்திரத்திலேனு
மிகுத்தவொன்பான்பதினொன்றி லுச்சத்திலேனும்

காணறியவுச்சாங்கி சத்திலிருந்தாலுங்
கருதரியவிரண்டினில்மூன் றினிலிருந்தானேனும்
வாணிபமும்பலிக்குநர வாகனமுஞ்சேரும்
மன்னராலுற்றசெய மாதுர்பிதுர்சுகமுங்
காணுமிகும்புதுக்கிரக முண்டாகும்ஞானங்
கல்வியறிவதுபெருகி கன்னியனுவனே. 5

அறிவுமிகும்புலவனுஞ்சட் டாட்டவியத்தனிலே
யரும்பாவியுடன்கூடிச் சுபர்நோக்கில்லாத
குறியுடையோனுகிடினுந் தனதான்யநாசம்
குவலயத்திற்பாதேச சஞ்சாரங்கொடுக்கும்
சிறியவர்கள்பகையுண்டாம் நீரிழிவுரோகஞ்
சேருமந்தப்பாவியுடன் நீசத்திலிருந்தால்
வருமைதரும்நாற்காலி நாசமுடன்கலகம்
வரும்விலங்குண்டாதுமின்னம் வகுத்திடக்கேள்மானே. 6

செயமிகுஞ்சாதகனுக் கவமிருத்துபயமும்
நிகழ்த்திடுவாய்சுபக்கிரகம் நோக்குறில்நற்பலனும்
ஆயதொருவிரண்டேழுக்கிவனுதனுகி
லவமிருத்துதோஷமுறு மதிகபரிகாரம்
மாயவன்றன்சகஸ்ரநா மஞ்செபிக்கத்திரும்
மதன்மகுடநதனைநிகர்த்து நிமிர்ந்துதிருமார்பிற்
பாயுமிருகோடனையு தனஞ்சுமந்தேயிளைத்துப்
பசுங்கொடிபோலசையுமிடை பைந்தொடிப்பெண்ணமுதே. 7

ஆக விருத்தம்-237.

---

## குருதிசை கேதுபுத்தி

பொன்னவனுர்திசையதனிற் கேதுபுத்தியதுதான்
பொருந்துபதினொருமாதம் நாளாறின்பலன்கேள்
அன்னவனுக்கேதந்தார்க் கதனுகினுலும்
அவன்சுபரோடிருந்தாலு மர்ப்பசவுக்கியமாம்
வின்னமுறுந்தரித்திரமுங்கெட்டபோசனமு
மிகுந்ததலையிடிவாதம் பித்தமதிசாரஞ்
சொன்னதொருயிருமலுட னுறுரோகங்குன்மஞ்
சொலுமரசர்கோபமுண்டா மென்றுரைசெய்வாயே. 1

உரையாதசட்டாட்ட வியந்தினிலேபாவி
யுடன்கூடியிருந்தாலும் பாவிகள்பார்த்தாலுங்

தரைமீதுகளத்ரபுத்ர நாசமுறும்பயமாந்
தரணிமன்னர்கோபமுறுந்தனபந்துநாசஞ்
சிறைசேர்க்கும்விலங்கதனல் மனவியாதியுண்டாஞ்
சேர்ந்திரண்டேழாமிடத்தி விருப்பானேயாகிற்
குறையாதவவமிருத்து பயங்களத்திரநாசங்
கூறுதற்குபரிகாரஞ் சிவபூசைசெய்யே. 2

ஆக விருத்தம்-239.

---

## குருதிசை சுக்கிரபுத்தி

செய்யதொருகுருதிசையிற் கவிபுத்திபதுதான்
சேர்மாதமுப்பத்தி யிரண்டதனின் பலன்கே
ளையமில்லாப்புகர்குருவுக் கந்தர்க்கதனுகில்
அதிகதிரிகோணகேந் திரத்தையடைந்தாலும்
மெய்யிலங்குவுச்சசொக்ஷேத் திரத்திருந்தாலுந்தான்
மிகுந்தவுச்சாங்கிசமாகி வீற்றிருந்தானெனிலும்
கையுடையகயமசுவ சிவிகைமிகலாபங்
கருதரியநாற்காலி பூலாபஞ்சுகமே. 1

சுகமுடையகிரகமதி லித்திரைசேர்ந்திடுவாள்
துடிமன்னர்சமானமுடன் சாலுவையுஞ்சேருந்
தகவுடையசாராதா தன்னிடம்வந்துறுவள்
தனித்துவடதிசை யதனிர் தனிமன்னர்பேட்டி
அகமதனிலதிகசுப சோபனமுண்டாகும்
அன்னையுடன்பிதாவினுக்கு மதிகசுகமாகும்
நிகரில்லாச்சிவபூசை மிகக்கிடைக்குஞ்சுகமே
நெட்டிலைவேல்விழியுடைய நெறிசரிபூங்குழலே. 2

பூவினிற்சட்டாட்டவியமது தனிலேபுகர்தான்
பொல்லாதநீசனு யிருக்கும்நெதகுகட்ட
மாவனுறும்பந்துசனக் கலகமுடன் களத்திர
மதுதனக்குப்பீடையுறு மதிபயமுண்டாகும்
மாவலிதாய்ச்சனிசெவ்வாய்ப் புகர்தனைப்பார்த்தாலும்
வருங்கலகம்ராஜநிட்டு ரங்களுடன்விலங்கு
கேவலமாயதிரோகம் மங்கையர்மூலத்தார்
கிட்டிடுமேவிஷங்கலந்த வன்னபோசனமே. 3

கிட்டிடுமுன்பெண்கொடுத்த மாமனுடன்கலகங்
கிடைத்திடுநற்சோதரற்குப் பீடையதுசேரும்
நட்டமுறுந்தனதான்ய கேந்திரகோணத்தில்
நலமாகுமிரண்டுபதி னென்றிருந்தாலுஞ்

சட்டமுடன்களத்திரபுத்திர தனதான்யலாபந்
தாணிவளர்பேட்டியுடன் றண்டிக்கையுஞ்சேரும்
இட்டமிகுநாற்காலி விர்த்தியதுசுகமு
மெய்துமெனவுரைத்தனர்க ளிசைக்கணிதர்தாமே. 4

கணிதமொடுகவிபிலவா னுடன்கூடுவானேற்
கருதரியதனலாபஞ் சகோதரவிரோதந்
துணியுமவனபகாரத் தந்தியத்திலேதான்
சொன்னதொருதனநாசஞ் சமரிலபசெயமாந்
தணியதொருசட்டாட்ட வியந்தனிலேபுகரோன்
றுனீசமாயுமஸ்த மனமாயுமிருந்தா
லணியாரும்புத்ரகளத்ர நாசம்பயமா
மானபங்குசன விரோதம் நீரிழிவுண்டாமே. 5

ஆகாதவாக்கேழுக்கிவ னதிபனாகி
லதிலிருந்தகிரகத்தை யதிபதிபார்த்தாலும்
வாகானவவமிருத்து பயமுண்டுவதற்கு
வரும்பரிகாரந்தன்னை வகுத்துரைக்கக்கேளாய்
பாகாருமொழிமாதர் மூலத்தினாலே
பகர்ந்தசிவபூசை பண்ணினார்சுகமாம்
மோகாபிமானமுள வாடவர்கள்மார்பில்
முழுதழுதபுளகமுலை மோகனப்பைந்தொடியே. 6

ஆக விருத்தம்-245.

---

## குருதிசை சூரியபுத்தி

தொடியேதாரகைக்கேள்வன் றிசையில்ரவிபுத்தி
தோன்றிவருமாதமொன்பா னாட்பதினெட்டினிலே
வடிவாகுமிரவிகுரு வுக்கந்தர்க்கதனாய்
வளர்கேந்திரகோணம் பற்றியிருந்தாலுங்
கொடிதானவட்டமத்தா னத்தான்பார்த்தாலுங்
குருபத்தியாதியிலே சிரரோவுஞ்சுரமும்
படிமீதுகுடியிருந்த கிரகமும்போங்கிலேசம்
பாவமதில்மனதுவரும் பருவிலங்குண்டாமே. 1

விலங்குடனேசத்துருவாற் பீடையமாகும்
விருதாவிற்கலகமுமுமேலாங் கேந்திரத்தில்
நலங்கொளுஞ்சொக்ஷேத்திரதிரி கோணத்திலிருந்து
நற்சுபரால்நோக்குறினுந் தனதான்யலாபம்
பெலங்கொள்மகாகீர்த்திவஸ்திரா பரணம்பூலாபம்
பேசரியசட்டாட்ட வியந்தனிலேயிரவி

கலந்திருக்கிற்பாவியுட னேகூடிலேனுங்
கருதரியநீசனு யிருந்தாலுங்கேளே. 2

நீசருடபகைமீறுங் காரியங்கள்நாசம்
நெடுந்தேசசஞ்சார நீதிமன்னர்கலகம்
பூசல்மிகுஞ்சோரரா லக்கினியாற்பயமாம்
பொருந்தியதன்வாரத்தில் நாற்காலிநாசம்
பாசமுறும்பந்துசன மித்திரவிரோதம்
பார்த்திபர்களாலதிக தனச்செலவுண்டாகும்
வாசமிகும்புழுகுடனே களபமிகங்கலந்து
வரைத்தனத்திற்பூசியிடு மான்விழிப்பெண்ணமுதே. 3

பெண்ணமுதேகேந்திரகோணத்தி லிருந்தாலும்
பிசகாமல்மூன்றொன்பான் றலத்திலிருந்தாலும்
எண்ணறியதனநாசங் களத்திரபுத்திரநாச
மிராசகோபம்பந்து நாசமுறும்பிடை
நண்ணிவரும்வயிற்றுவலி சுபன்பார்த்திட்டாலும்
நற்சுபனோடேகூடியிருந் தாலுஞ்சுகமாந்
தின்னமுறும்தனலாபம் ராச்சியலாபங்கள்
சேர்ந்துவருஞ்சுபாசுபங்கள் சேருமிளந்துயிலே. 4

வேறு

சோராதவிரண்டேழுக்குச் செங்கதிர்நாதனுகில்
வாராதவிலங்குகாவில் வருமவயிருத்துண்டாகும்
நேராமாதித்தல் றன்னை நிதம்நமஸ்காரம்செய்ய
சீராருங்கண்டதோசஞ் சென்றிடுமென்றுசொல்லே. 5

ஆக விருத்தம்-250.

---

## குருதிசை சந்திரபுத்தி

சொல்லியதோர்குருதிசையிற் சந்திரபுத்தியதுதான்
றொகைபெறுமெபதினாறு மாதமதின்பலன்கேள்
நல்லகுருவுக்குமதி யந்தர்க்கதனுகில்
நலந்திகள்கேந்திரகோண முச்சசொக்ஷேத்திரத்தில்
வல்லதிதாருபதினாறு கலையுமொன்றாய்க்கூடி
வந்திருக்கில்ராச்சியலா பம்மதிகக்கீர்த்தி
யில்லமதிற்சிவிகைவரு மாபரணஞ்சேரு
மெழிலாருங்களத்ரசவுக் கியமுந்தருமே. 1

கருமேககலைவஸ்ர லாபமிகவுண்டாந்
தரணிமன்னர்சன்மானம் பாலனயோசனமுந்

வருமேசாதகனிருக்கு மனை தனிற்சீதேவி
வாழ்ந்திருக்குங் கெசமசுவம்நாற்காலிகாபங்
திருமேவுஉத்தரத்தி லராகுவுடபேட்டி
சேருமந்தமன்னவரா லதிபாக்கியமுண்டாங்
கருசாகும்பொன்னுமுத்த ராயணத்துரவியுங்
கதிர்மதியுங்கூடிடில்யுத்த களத்திலபசெயமே.
செயமில்லாச்சட்டாட்ட வியந்தனிலேமதிதான்
சீரணமாய்த்தானிருக்கிற் கீர்த்திதனநாசம்
நாமில்லாப்பந்துசன ராசமன்னர்கோபம்
நாடியிடுமனைபோகும் பீனிசரோகமுமாம்
பயமுள்ளநீரிழிவு ரோகமிகவுண்டாம்
பாக்கியகோணத்திருந்தால் விபசாயலாபம்
வயமுள்ள திருச்சேரும் பூலாபஞ்சுகமாய்
வஸ்த்ரபூஷணங்கிரக வாகனமுண்டாமே.
மேவியிடும்வாக்கினிற்பாக் கியத்திலிருந்தாக்கால்
வெகு தானியமொடுபல் பூஷணமும்லாபம்
பூமிதனிற்றளகர்த்தத்துவ மதுவுமுண்டாம்
போந்தாரெட்டீராறிற் பாவியுடன்கூடி
லாவதுறுந்தனநாச மிராசகோபமுமா
மக்கினியார்சோரராற் பயஞ்சுரமுங்குளிருங்
கேவலமாய்ச்சிரநோவாஞ் சுபன்கூடிற்பார்க்கிற்
கெண்டையின்கண்மடமாதே வெகுசவுக்யமிருமே. 4

வேறு

மேன்மைசேரிண்டேழுக்கு மிந்ததிபதியேயாகில்
ஆனதோர்தாரநாச மதற்குமேபரிகாரந்தான்
தானுறுதுர்க்காதேவி செபமதுதானேசெய்தால்
பானுறுபனிப்போற்றோஷம் மறந்துபோமென்றுசொல்லே. 5

ஆக விருத்தம்-255.

---

## குருதிசை செவ்வாய்புத்தி.

சொல்லக்கேள்குருதிசையிற் குசன்புத்தியதுதான்
தொகுத்தபதினொருமாதம் நாளாறதாகும்
நல்லசெவ்வாய்குருவுக்கந் தர்க்கதனுயிடினும்
நாடிமூன்றாறுபத்துப் பதினொன்றிலேனும்
வல்லமையாமுச்சசொக்ஷேத்திரகேந்திரத்தேனும்
வதிந்திருந்தாலற்பசவுக் கியஞ்சொற்பலாபம்
மெல்லியலேமூற்பாதி தனநாசமாகும்
வியாதியும்பிற்பாதியிலோ வரும்பலனைக்கேளே. 1

பலனுன தன தான்ய லாபமிகவுண்டாம்
பதிவாகுமிவன் வீட்டிற் சீர்சுபவிசேடம்
நிலமான தன தான்ய நாசமற்பசவுக்யம்
நேரானதேவதெரி சனமுண்டாம்பின்னே
நலனுனபுவிராசர் சன்மானமுண்டாம்
நல்லவஸ்த்திராபரண முதன்மையுடனெய்தும்
வலிதானராசருட பிலத்திஞல்விரோதம்
வந்துவிடுமென் றுசொல்லி வருத்தனர்முன்னுரே. 2

வந்தவன்றுஞ் சட்டாட்ட வியந்தனிலேயிருந்து
வளர்பாக்கியா திபதி சேய்தனைப்பார்த்தாக்கால்
பிந்திவருமற்பசுக லாபமிருஞ்செலவாம்
பைருகேந்திரகோணத்தை யடைந்திருந்தானேனினஞ்
சொந்தமுடனுன்பதுபன் ஹெனன்றிலிருந்தாலுஞ்
சுகமானபோசனமும் ராசசன்மான்முமாஞ்
செந்திருவைவிகர்மாதே வடதிசையிற்செயமுஞ்
செகராசராற்பூமி லாபமுமுற்றிடுமே. 3

பூமிமகஸசுபனேடே கூடியிருந்தானேல்
பூமன்னர்சன்மானஞ் சிவிகைவரும்நடுவிற்
மருதமாங்சுடைசியிலு மதிகசஷ்டம்பாவா
தன்னேடேகூடியிடிற் றன தான்யமுடனே
நேமமாய்விபசாய நாசமுறுமபின்பு
நேத்திரத்தில்வியாதிவரும் பரதேசகமனஞ்
சாமியிவனிரண்டேமுக் காகிடுவானுகிற்
சாருமவமிருத்திதனுக் தன தானஞ்செய்யே. 4

ஆக விருத்தம்-259.

---

## குருதிசை இராகுபுத்தி

தானுனகுருதிசையி லிராகுபுத்திமாதர்
தானிருபத்தெட்டுடனே மூவெட்டுநாளாம்
வானுருங்குருவுக்குப் பாம்பத்தர்க்கதனுய்
வரும்பாவியுடன் கூடி னுலுங்கேந்திரத்தி
லானுலுந்திரிகோணத் தடைந்திருந்தாலுந்தா
ன திகசண்டையாசர் பயமவன்கிராமந்தனிலே
மானேகேள்தன தானுய நாசமுறுங்களத்திர
மகவுடனேயிஷ்டபந்து தனிநாசமாமே. 1

நாசமுறும்விதவையுடன் கூடுவனப்பால்
நற்களத்திரகிலேசமுறுஞ் சுபன்கூடுவானேல்

நேசமுறுஞ்சுபாசுபங்கள் பூமிசொற்பலாபம்
நேரானசோதரமும் விரோதமிகவுண்டாம்
பேசரியசட்டாட்ட வியந்தனிலேயிருந்தால்
பெருந்திடுந்தீயாற்சோர ராலரசர்பயமாந்
தேசமதிற்சாதகற்கு நீரிழிவுபீடை
சேர்ந்திடுமென்றுரைததனர்சோ திடக்கணிதர்தாமே. 2

திடமானகேந்திரகோ ணத்தையடைந்தாலும்
செய்யசுபர்பாவியுட னேகூடினாலும்
அடைவானதாயாதி விபகாரமுண்டாம்
அபகீர்த்திபரதேச சஞ்சாரமுடனே
படராகுஅபகாரத்தா தியிலேகட்டம்
பகர்நடுவிலந்தியத்தில் வெகுசவுக்கியமாகும்
வடமேறுநிகரான முலைக்கொடிமின்னாளே
வகுத்துரைத்தார்பாராசரனார் வடமொழியிற்றானே. 3

பாராசரனாருரைத்தபடி யாறெட்டீராறிற்
பதிந்திருக்குந் திசைநாதன் றன்னுடனேகூடக்
கராசலம்போலுடன்ராகு பதிந்திருப்பானாகிற்
காசினியிற்சுபமாகுங் கருதுமிரண்டெழுங்
கிராசனுபவனிருந்தால் வருந்தேகநாச
மிசைந்தகளத்திரநாச மனோபீடையுண்டாஞ்
சராசரமெல்லாநிறைந்த யிரவிதனைநிதமுந்
தம்பதியோடேபணியச் சகலசுகந்தானே. 4

ஆக விருத்தம்-263.

---

## சனிதிசைப் படலம்

சகலபுவிதனைவிளக்கு மிரவிமகன்றிசையிற்
றானுறும்பத்தொன்பானுண் டினிற்பலனைச்சொல்வேன்
தகவில்லாவிலங்குவரும் ராசசோராக்னி
தரும்பயமாந்தன தான்ய மிகநாசமாகும்
புகலரியபரதேச சஞ்சாரமுடனே
பொருந்துபிதிர்வர்க்கமதில் நாசமதுசெய்யும்
மிகவிர்தச்சனிதிசையுற் றிடும்போதுண்டாகு
மேதினியிலுச்சனுய்ச் சனியிருந்தார்களே. 1

தாலமதிற்கிராமமொடு பூமிவித்தைலாபந்
தன்பிதாநாசமுடன் பந்துசனக்கலகம்
நீலனுமேசொக்ஷேத்திர கேந்திரத்திலிருந்தால்
நீங்கரியபரதேச சஞ்சாரமுடனே

பாலைவனந்தனில்வாசஞ் செய்திடுவன்மூன்று
பத்தாறுபதினொன்றி லிருந்திடுவானாகில்
ஞாலமிகுபலனுண்டாங் களத்ரபுத்ரலாபம்
நற்சிவிகைவஸ்த்ரா பரணமுமுண்டாமே. 2

மேதினியிற்கேந்திரகோ ணந்தனிலேகாரி
வீற்றிருக்கிலதிகீர்த்தி ராசசன்மானங்கள்
சோதிமிகுமாபரணம் வஸ்திரலாபங்கள்
சுகமதிகமாகவுண்டு வாக்கெட்டுவியத்தில்
நீதியிலாதிவனிருக்கில் அரசரால்நாசம்
நீங்காதுகளத்திரத்தின் பீடைதொழில்நாசம்
மோதியிடில்விபசாயத் தாற்பூமிலாப
முற்றசயரோகமா தியிற்களத்ரம்போமே. 3

திரமானசகோதரங்கள் விரோதமிகவாகுந்
திசைமத்யப்பாதேச சஞ்சாரத்துடனே
விரைவாகப்பரதேச வாசமுமுண்டாகும்
வீணாகாபாலனன்ன போசமுங்கிடைக்குந்
தரைமீதுகடைசிதனி லதிகட்டமாகுந்
தங்குமருப்பினைப்பழித்துச் சகோரமதைச்செயித்தே
வரையோடுபொருதெழுந்த வமுதரசத்தேனை
வைத்திடும்பொற்கலச மெனவளருமுலைக்கொடியே. 4

ஆக விருத்தம்-267.

---

## சனிதிசை சனிபுத்தி

கொடியதொருசனிதிசையிற் றனதபகாரந்தான்
கூறுண்டுமூன்றுடனே நாள்மூன்றின்பலன்கேள்
கூடியதொருபீடைவருங் கிரகம்போமாசர்
கள்ளராலக்கினியால் வெகுநாசமாகும்
வடிவுடையகளத்திரத்தோ டுடன்பந்துநாசம்
வருவிலங்குபந்தனமுந் தாயாதிகலகம்
படியினிலேமுடவன்றன் மாதத்திற்பயமாம்
பரிதியுடமாதமதிற சுகமெனவும்பகரே. 1

பகராததொருமாதந் தனநாசமாகும்
பதிமூலகோணசொக்ஷேத் திரத்தையடைந்தாலு
மிகவேதான் சுபாங்கிசத்துச் சத்தானந்தினிலே
விண்மீனத்திருந்தாலு மதிகசவுக்கியமாஞ்
செகலாபமதிகீர்த்தி புத்ரலாபங்கள்
செயம்பொருந்துசந்தோ ஷராசசன்மானமுமாம்

வகையாருஞ்சபைக்கிவனே நாயகனுமாவான்
வளர்பரியுந்தந்தியுடன் வாகனமுண்டாமே. 2

கனராசராலனைத்த காரியங்கள்கூடும்
கமலமின்னாளிவன்மனையில் வாசமதுசெய்வாள்
வனமாறும்நாற்காலி தனதான்யலாபம்
வந்துவிடுஞ்சட்டாட்ட வியந்தனிலேலபாவி
தனதாகவிவனுடனே கூடிடுவானெனினுஞ்
சனிநீசமாகவே யிருந்திட்டானெனினு
மனராறுமதிகபயம் விஷபீடையாகு
மாடுமுதலாபமென, வகுத்துரையுமின்னே. 3

மின்னேகேளதிகசண்டை யுடன்வயிற்றுக்கடுப்பு
மிகுகுன்மரோகமுறும் ராகுதனில்சிரநோய்
பின்னேயுமதிகசுர பத்தியினிற்றீயாற்
பெருத்தகள்ளராற்பயமாந் தானியமுஞ்சேதஞ்
சொன்னதுமிகுபீடை யந்தியத்தில்விவாகந்
துடிமன்னரதுசுருதி சுகமிகவுண்டாகும்
பன்னகப்படபதனை யாசிலையைத்தேரைப்
பஞ்சபானன்மனையைப்பழித் தவல்குற்றிருவே. 4

வேறு

வேலுந்திரை வாளுங்கடல் மீனும்பொருவிழியாய்
மிகுமூன்றிலும் வருமாறிலும் விளைலாபமத்திலும்
நீலன்றனித் திருந்தானெனி லேனும்மதன் பலன்கேள்
நிதிதானிய முடனேசுக முறுவாக்கினி லெட்டில்
ஞாலந்தனை யுடையோனுட னிவன்கூடிடி லவமாம்
நலமில்லவ மிருத்தெய்திடும் நாடும்பரி காரம்
கோலந்திக ழொருமண்டல மெட்டிபமுஞ் சனிக்கே
கொடுத்தேநிதம் வலமாய்வரக் குறைநீங்கியுஞ் சுகமே. 5

ஆக விருத்தம்-272.

---

## சனிதிசை புதன்புத்தி

ஆமேசனி திசையிற்புத னபகாரம தனுதா
னறுநாங்குட னிறுநான்கென வவன்மாதமொன் பானுள்
பூமிதனிற் சனிக்கேயுறு புதனந்தர்க் கதனுப்
பொருந்துந்திரி கோணகேந்திரம் புகுந்தாலு முச்சத்திற்
றுமேவினுஞ் சொக்ஷேத்திரத் திருந்தாலும்பன்னொன்ற
ததிலும்பிதுர்த் தானத்தினி லேனுஞ்சுபாங் கிசமாய்

தாமேயிருந் தாலுஞ்சுபன் றன்பார்வையுற்றாலுந்
தன்ராச்சியம் பாராச்சியந் தருமேயினியுங் கேளே. 1

இனிதாகிய நரவாகன மிசைராஜர்கள் போக
மியல்பாய்வரு முச்சாங்கிச மிவற்றினுயிற் சுகமாம்
வனிதாய்நவ தீர்த்தந்தரும் வளர்யாத்திரை பலனும்
வருமாருட னிருகாலினும் வகையாவிந் தனினும்
முனிவானசத் துருக்ஷேத்திர முடனீசவி டேனும்
முறையாயிருந் தாலுஞ்சனி சேய்பாவியுஞ் சேரில்
தனநாசமு மினைகோபமு மெதிராளிகள் பயமுந்
தானேவரும் விலங்குண்டெனச் சகமீதினி லுரையே. 2

உரைகேந்திர கோணத்தினி லுயர்மூன்றுபன் னொன்றி
லுற்றாலவன் றனக்கேசுக சவுக்யவித்தை யுடனே
தரைமீதினில் மிகவாழ்வுறு சகராசர்க ளாவன்
றனதாகவே வெகுதேச கிராமம்பல சாருங்
குறையாதிது பலனுதியில் கொடுக்கும்நடுக் கடையிற்
கூர்சத்துரு பயம்பீடையுங் குலபந்துடன் றனம்போம்
நிறையாகிய பிதுர்மாதுரு சுகமாஞ்சுப னூலே
நேர்பார்த்திடி லதிலேவரும் பலன்கேளினி நீயே. 3

கேளாயினி மதிபாக்யங் கெடிமன்னர்சன் மானங்
கீர்த்திப்பிர பலமாகுவன் கிடைக்குங்கன லாபந்
தாளாதுயர் நரவாகனந் தானேவரும் பந்து
தான்மித்திர களத்ராதிகள் சார்வஸ்திர லாபம்
வேளாமென வெழில்மீறுவன் வெகுபூஷணங் கிடைக்கும்
மிகுபுத்திரு வரும்போதினில் சுகமத்திய மதனில்
வாளார்விழி யாய்த்தானிய லாபங்கடை யதனில்
மனஸ்தாப முண்டாமென்றுமுன் வகுத்தே யுரைத்தாரே. 4

வகுத்தேசொலு மாறெட்டிலு வாகாய்வியந் தனிலும்
வரும்பாவிக ளுடன்கூடியெ வதிந்தாலவன் றனையே
தொகுத்தேசுக லுடன்கூடிலுஞ் சுபன்பார்வையுற்றாலும்
சுகலாபமெல் லாமற்பமதாகும்மவன் புத்தி
மிகுத்தாதியில் நரவாகன சுபசோபன லாப
மிகுதர்மமுண் டாகும்நடு வினிலேமனை போகும்
பகுத்தோதிடில் மிகப்பீடைகள் பலவாய்வரும் போகும்
பாராசர்கள் சோராக்கினி பயந்தான்மிக வருமே. 5

வேறு

வருங்கடையினிலேகட்டம் வாக்கேழுக்குடையோனுகிற்
றருமலமிருத்துண்டாகுந் தான்பரிகாரங்கேளாய்

அருமையாய்முடவர்நோயோரந்தகரிவர்கட்கன்னம்
பெருமனதுடனேசெய்யபீடை போஞ்சுகமுண்டாமே 6

## சனிதிசை கேதுபுத்தி

உண்டாகுஞ்சனிதிசையிற் கேதபகாரந்தா
னுறுமாதம்பதிமூன்று நாளொன்பானுகுந்
தண்டாதசசியுடனே கேதுறுங்காலத்திற்
சரீரத்திற்பிராணபயந் தனையர்மிகநாசங்
கொண்டாடும்பாவியுடன் கூடிடுவானாகிற்
குடியிருந்தமனைபோகு மதிகபயம்விலங்கு
வண்டாரும்பூங்கூந்தற் களத்ரபுத்ரநாசம்
வந்துவிடும்பரதேச சஞ்சாரந்தானே. 1

சாரமுறுலக்கின திபருடனேயிருந்தாற்
றனுதிபுத்தியிலே சவுக்யதனலாபந்
தீரமிகுகெங்காஸ்த்தா னத்துடனேயதிக
சிவபூசையுங்கிடைக்குங் கேந்திரகோணத்தில்
வாரமுடனிருந்தாலுஞ் சட்டாட்டவியத்தில்
வந்தாலுமவமிருத்து பரிகாரமதற்கு
வீரமுளசனிவிரதமண்டல மட்டிருக்க
வெகுசுகமுண்டாகு மெனவிளம்பினர்முன்னோரே. 2

ஆக விருத்தம்-280.

---

## சனிதிசை சுக்ரபுத்தி

அணங்கேகேள்சனிதிசையிற் சுக்கிரனார்புத்தி
யதுமுப்பதுடனெட்டு மாதமதின்பலன்று
னிணங்குமிந்தச்சுக்கிரனு ருச்சசொக்ஷேத்திரத்தி
லிருந்தாலுங்கேந்திரகோ ணத்திலிருந்தாலுங்
குணம்பெறவெட்டிரண்டுபதி னொன்றிலிருந்தாலுங்
கூறுபுத்திரகளத்ரசவுக் கியமதிகசுகமாஞ்
சுணங்குபடர்ந்தடிகனத்துப் புடைத்திளகிவிம்மி
துடியிடைதாங்காதெழுந்த துணைமுலைபெண்ணரசே. 1

செயமிகுந்தகீர்த்தியுடன் பூமிலாபமுமாஞ்
செகராசர்சன்மானந் தீவினிலும்பொருள்கள்
நயமிகுந்துவரும்வியாழ நதிசாரமாகி
நாலோசனைச்சேர்வானேல் பாக்கியலாபமுமாம்

வயமிகுந்தகாரிய தி சாரமாயிருந்த
    வனைச்சேர்வானுகில்மகா ராசயோகமுமாம்
பயமுறவாறுமிடத்தில் மூடமானாலும்
    பகர்ந்திடுஞ்சட்டாட்ட விபத்திலிருந்தாலுங்கேளே. 2

திருந்தாதிதாரமுறும் நாசமனவியாதி
    சேர்ந்திருக்குமனைபோகும் பந்துசனக்லேசம்
வருந்தாதராஜரால் நிட்டூரஞ்சேரும்
    வளர்பாக்கியங்கேந்திரகோ ணத்தையடைந்தாலும்
பொருந்தாதலாபனுட னிவன்பொருந்தினாலும்
    பூமன்னர்சன்மான மதிசந்தோஷமுமாங்
கிரந்தாதிவித்தையுடன் வஸ்திராபரணங்
    கிடைத்திடுமேபெரியோர்கள் நேசமின்னங்கேளே. 3

குறையாதுசிவபூசை புத்திரலாபங்கள்
    கோவேந்தர்கிருபையினுர் சிவிகைமிகுலாபம்
நிறைவுபெறுமாறெட்டீ ராறிலிருந்தாலும்
    நீங்கரியபிரவியுட னிவன்கூடினாலும்
குறைவதாங்களத்திர நாசமும்நேத்ரரோகங்
    கூறுதந்தரோகமுடன் குன்மவலிசேருந்
தறைதனிலேமரமேறி வீழ்ந்திடுவனுற்ற
    சகோதரமுநாசமுறுந் தாரணிபூங்குழலே. 4

தாரணியில்ராகுவுக்கு சத்துருவானாலுந்
    தானேமுன்சொன்னபலன் சரியாகக்கொடுக்கும்
பூரணமாயிரண்டேழுக் கிவனுதன்றுகிற்
    பொரிகளத்ரகிலேசமுடன் குன்மவலிசேருங்
காரணமாம்பரிகார மதுதுர்க்கைபூசை
    கண்டேழைக்கன்னமிட பீடைபோஞ்சுகமாம்
வாரணிந்துபுடைத்துவிம்மி மதர்த்துமிகக்கனத்து
    வளர்முலையைத்தாங்குமிடை வாடுமின்னாளே. 5

ஆக விருத்தம்-285.

---

## சனிதிசை சூரியபுத்தி.

வாடாதசனிதிசையி லிரவிபுத்தியதுதான்
    வருமாதம்பதினென்று நாள்பனிரெண்டாகுந்
தோடார்தாமரைநண்ப னவன்மகனுக்கேதாஞ்
    சொல்லரியவத்தார்க் கதனுகியிருந்தாலு
மீடலக்னாதி பதியுடன்சேர்ந்தாலு
    மிவன்புத்தியாதியினி லற்பபயமுண்டாம்

கோடாருங்கனதனத்தாம் நடுங்கடையிலதிகக்
கொடுங்கட்டமுண்டெனவே கூறினர்முன்னோரே. 1

கூறியிடுஞ்சென்மமதில் சனியிருப்பானாகிற்
குறிதத்பயந்தாயாதி யிட்டசனக்கலம்
மீறியதோர்சத்ருபயம் ராசாக்கள்கலகம்
வியாழனோக்குற்றக்கால் சகலமும்நாசங்காண்
சேறியதோர்சுபனோடே கூடிடினுஞ்சுபரால்
செயும்பார்வையுற்றாலுங் கூடிவரும்பாக்ய
மாறியுடன்ராகுசனி ரவிகூடிநின்றால்
மாபீடைமனவியாதி யாகும்பின்னங்கேளே. 2

ஆகாதகாச்சலோ டதிசாரரோக
மன்னியதேசங்கமனம் நாற்காலிநாசம்
வாகானவுச்சசொக்ஷேத் திரகேந்திரகோணம்
வளர்லாபத்தடைந்தாக்கால் புராணகதைகேள்வி
போகாதுவிபசாய பலமிகவுமுண்டாம்
புகழ்தெய்வகீர்த்தனமாய் புகல்நீசனுறாற்
பாகாருமொழியாய் சத்ருவீடெய்திடினும்
பன்னிரெண்டெட்டாறினிலே பதிந்திடினுங்கேளே. 3

பதிவில்லாப்பீடைதலை வலிகாச்சலுடனே
பகர்ந்தபிதுர்கிலேசமுறுங் காரணமாய்க்கலக
மதியில்லாத்தாயாதி யிட்டசனக்கலகம்
வளரக்னிபயமுடனே நீரிழிவுரோகந்
துதிபெருங்கேந்திரகோணம் லாபத்தானத்திற்
சூரனுரச்சகோதரநா சங்காட்டுமிந்தப்
புதுமனைபோய்பரதேச சஞ்சாரமாகும்
புகழ்பெருகுந்தனதான்ய நாசமுறுந்தானே. 4

நாசமுறுமன்னியர்கள் பணிவிடையுஞ்செய்வார்
நலமில்லாநீசமங்கை சங்கமமுமகால
போசனமுங்கிடைக்குமப கீர்த்திமிகவுண்டாம்
பொருந்துதொழில்நாசமுறுஞ் சட்டாட்டவியத்தில்
வாசமுறிலதிபீடை யதிகட்டவிதமும்
வளர்மனைபோந்தனச்செலவு சோராக்கினிபயமாம்
நேசமிகுமாடவரை யிளநகையாலுருக்கும்
நேரிழையேபராசரமா முனியுரைத்தபலனே. 5

வேறு

பலனுறுமிரண்டேழுக்கு பதிரவியானபோதில்
நலமுலாதவமிருத்தம் நற்பரிகாரந்தானே

நிலமதிலொளிகொள்சூர்ய நமஸ்காரஞ்செய்தாக்கா
விலகியசுகமுண்டாகு மென்றுதானியம்புமின்னே. 6

ஆக விருத்தம்-291.

---

## சனிதிசை சந்திரபுத்தி

மின்னிடையாம் சனிதிசையிற் சந்திரன்றன்புத்தி
மிகுமாதம்பத்தொன்ப தகன்பலனைகேளாய்
நன்னயமாய்க்காரிக்குச் சனியந்தர்க்கதனுய்
நன்னிடினும்புதன்பார்வை யுற்றுலப்புதனே
டுன்னிவிதுக்கூடிடினும் பட்டாபிஷேக
முயரிராச்சியலாப மிராசபேட்டியுமா
மன்மதன்றன்னரமனையா யாசிலையைத்தேரை
மாசுணத்தின்படத்தைவென்று வளருமல்குற்றிருவே. 1

திருவேகேள்சிவிகையுடன் வஸ்திராபரணஞ்
சேர்திநாற்காலிவரும் பிதுர்மாதுர்சவுக்கியந்
தருமேதற்சுகமெல்லா முச்சசொக்ஷேத்திரத்தைத்
தானுடைந்துபூரணசந் திரனுடன்கூடிடினும்
வருகேந்திரகோணத்தி லிருந்துவிருந்தாலும்
வளமாகமுன்சொன்ன பலனுகுஞ் சசிதான்
முருகார்பூங்குழலாய்பூ ரணசந்திரனுகி
முழுப்பாவியுடன்கூடில் மொழிபலனைக்கேளே. 2

பாவியுடன்விதுகூடிற் களத்ரபுத்ரநாசம்
பகர்மாதுர்நாசமுடன் மிகும்பீடையதுவாம்
பூவினிலேகேந்திரகோ ணத்தினிலுற்றாலும்
புகலறியமூன்றுபதி னென்றிலிருந்தாலுங்
கோவரசரபிமானந் தனலாபந்தேசங்
குறைவில்லாக்கிராமமுடன் வெகுலாபமாகு
மேவியமத்தியத்திலந்தி யம்வரைக்குந்தானே
மிகுராசர்பீடைவரும் விரைசெறிபூங்குழலே. 3

பூங்குழலேசட்டாட்ட வியத்தினிலேசசிதான்
பொருவரியபெலவானுய்ப் புகுர்தினிதாயிருக்கி
லாங்கவர்க்குநல்லபோ சனமதிகசுகமா
மண்டலர்கள்நாசமுறு மதிற்பாவிசேரி
லோங்கியவப்பாவியினுற் பார்வையுற்றலேனு
முறவிலங்குகிரகம்போம் பீடைபந்துநாசங்
கோங்கவிம்பும்பூங்கரும்பும் பொருதமுலைமொழியாய்
குமித்தனர்சோதிடமுணர்ந்து கூறியவல்லோரே. 4

வல்லதோரிரண்டேழுக்கு மதிநாதனுகிப்பின்னு
அல்லல்சேர்பாவியோடே யவன்வந்துகூடுவானேல்
சொல்லுவாய்மாணமந்தத் துன்பங்கள்தீரத்தானே
நல்லதோர்பரிகாரத்தை நாமினிப்புகலுவோமே. 5

ஓமெனும்பிரணவத்தை யுறுதியாய்மனதில்வைத்து
நேமமாய்அந்திசந்தி நித்தியந்தியானஞ்செய்து
பூமியில்மகேசுரர்க்குப் பூசைசெய்தேனழைக்கன்னம்
தாமிடச்சாலதோஷஞ் சார்ந்திடாதகலுந்தானே. 6

ஆக விருத்தம்-297.

---

## சனிதிசை ராகுபுத்தி

சுகமிலாச்சனிதிசையிற் செவ்வாய்தன்புத்தி
சொலுமாதம்பதின்மூன்று நாளொன்பததற்கு
மிகுசெவ்வாய்மந்தனுக்கந் தர்க்கதனுனும்
விளங்கியகேந்திரகோண லாபமுற்றுனேனும்
புகலரியவுச்சசொகேஷத் திரத்தடைந்தானேனும்
பொருந்துதசாதிபனுடனே கூடினுனேனுஞ்
சகமதனில்விலங்குதருஞ் சுரதோஷமிஷ்ட
சனனுசம்வாதமொடு பித்தபிணியுறுமே. 1

உற்றலக்கினதிபதி யுடன்கூடினுனு
முச்சத்திலிருந்தாலு மொருமூன்றிலாறிற்
பெற்றசமலாபமதிலிவனிருந்தாலுந்தான்
பெருகுமதுசந்தோஷம் வஸ்திரலாபங்கள்
கொற்றவராற்றளகர்த்தஞ் சமரமதிர்செயமாங்
கூடுசுகம்புதுக்கிரக லாபமதுண்டாகுங்
குற்றமில்லாத்தனலாபம் பால்பாக்யத்துடனே
கூடிவருமென்றுரைத்தார் குறியுணர்ந்தோர்தானே. 2

கூடியதோர்லக்கினத்துக் கீனுடையோனுற்
குறித்தசமரினிற்செயமாங் குவலயமுஞ்சேருந்
தேடியசகோதரத்தால் விரோதமிகவாகுந்
திகழ்ந்துவருமெட்டேழுக் கிவனுதனுகில்
நீடில்லாவிரண்டுடையோ னிவன்கூடுவானே
டிசையுமவமிருத்துபய மிதுதீரவென்றுல்
ஆடுக்காவடிமுருகன் றனக்கெடுத்துனழை
அன்னமிடதோஷமது அகலுமவமிலேயே. 3

அவனிமகன்சட்டாட்ட வியத்திலிருந்தானு
மஸ்தமனமானுலு மதிநீசனெனினும்
புவனமதிலாசராத் சோரராத்தியாற்
பொருந்துபயங்கிரந்தியொடு மேகமுமுண்டாகும்
பலமிருந்தவிலங்குவருங் கிராமம்போர்துணைவர்
பகையாகுந்தாயாதி சனக்கலகமுண்டாந்
தவமுறுகேந்திரகோண லாபத்திற்பெலவான்
றன்னுடனே கூடியிருந் தானுமினுக்கேளே. 4

இனியதொருமூன்றிலிருந் தானுமிருந்தவனே
யெழிற்சுபர்கள்பார்த்தானு மதிகசந்தோஷங்கள்
தனதான்யலாபமுறுங் கலியாணம்நடக்குந்
தானேநாற்காலிவரு மாதியற்பபலனுக்
கனியாகுமத்தியத்திற் சவுக்யதனலாபங்
கடையதனிற்றனதான்ய முறுநாசமாகும்
யினைதானுமிடைபோகா தேநெருங்கிப்புடைத்துத்
திரண்டெழுந்தகனதனச்செப் புடையமடமயிலே. 5

செப்பிடக்கேழ்சட்டாட்டவியந் தனிலேபாவி
சேசடனேயிருந்தாக்காற் சேருங்கீரிழிவு
தப்புதலைவலிகாச்ச லெதிராளிசமரிற்
றூனுண்டாமபசெயமு மாணமும்வந்தெய்துங்
கொப்பிலகுங்குழையுடனே வாதாடிப்பொருதுங்
கூாரும்வடிவாளை வேலினையும்பழித்து
மைப்படியும்விழியிணையா லாடவர்களுயிரை
வாட்டிடுஞ்சிற்றிடையுடைய மங்கைபருக்காசே. 6

ஆக விருத்தம்-303.

---

## சனிதிசை இராகுபுத்தி

### வேறு

மங்கையேசனி திசையில்ராகுவ குத்தத்திய தேதனில்
மாதமுப்பது நாலினோடுறு நாளாதாமது தானுறும்
அங்கமாகிய மந்தனுக்கிவ னந்தார்க்கத னுகினுஞ்
சொல்லுகின்றம னேனியாதிகள் கலகமோதிட பீடையாம்
பொங்கமாகிற ஞாதிமார்விப காரமேவிடு நாசமாம்
பொருளுநாசமி ராசகோபம தாகுமேபுவிநாசமாந்
தங்குதேசம கன்றுபின்பா தேசமேயுறு வானவன்
றமனியக்குட மதுநிகர்த்தப யோதரத்திரு வாமினே. 1

திருவிளங்கிய லக்கினுதிப னுடனுரைந் திடுவானெனிற்
சேருமா தியி லேசவுக்கிய நடுவிலுங்கடை யதிலுமே
வருமிருந்தநி கஷ்டபீடைகள் வாருசேர்தன தானிய
வகையினுசம தாகுமூன்றினில் மருவுமாறினிற் பத்தினிற்
பொருளதாகிய லாபமீதுபு குந்திருந்திடி லிடபமும்
போற்றுனற்கட கத்திேேனாடுறு பூவைவீணையி லெய்திலுந்
தருமிராசசன் மானவஸ்திர பூஷணாதிகள் லாபமாந்
தானினைத்தது பலிதமாஞ்செய சர்வகாரிய லாபமே. 2

காரியத்துட னிருதிமூலைக திக்தனற்பய ணத்தினிற்
காசினிக்கிறை பேட்டியுண்டிகை கருதுதேவதா பூசையுஞ்
சாருமேசனி ராகுவாம்வி மூவர்தானுமொரே யிடந்
தானுதித்திடி லேகளத்திர மோடுதந்தையு நாசமாம்
வாறமுற்றிடு மாதுர்நாசம் வருத்தவிஷ்டகி லேசமே
வந்துசேருமோ ராறிலெட்டினும் வளர்வியத்திலு மாயினும்
கோதுற்றதோர் கோணகேந்திரம் நிற்கிலுஞ்சுபர் கூடினு
நித்யமற்பசு வுக்யபாமென நீபுகன்றிடு வாய்மினே. 3

புகலுகின்றதோர் பாவியானவர் புத்ரரொடு கூடினுற்
பொருந்துமேயப கீர்த்தியோடதி பயமுறுங்கன நாசமாந்
தகவுருஞ்சுப ருடனிருந்தவர் தங்கள்பாருவை தங்கிடில்
தரணிமன்னர்ச மானமுங்கவி யாணமுந்தரு ஞானமே
மிகவிரும்பினு நல்லகர்மமி குக்குமே விபசாயமும்
விளங்கிரண்டட னேழில்மாசுன மேருநாதனும் கூடிடில்
செகமறிந்திட வருமிருந்தநி தீதுசேரவ மிருத்துவுந்
தீரவேசிவ பூசையானது செய்திடச்சுப மாகுமே. 4

ஆக விருத்தம்-307.

---

## சனிதிசை குருபுத்தி

சுகமுறுஞ்சனி திசையிலேகுரு தோன்றிடும்மப காரமே
சொல்லில்முப்பது மாதம்நாள்பனி ரெண்டதாமதி லேபலன்
மிகவுருஞ்சனி யுறையிடந்தனில் வேதனங்கர்க் கதனதாய்
மேவிலுநல்லகோணகேந்திர லாபமீதுறுவானெனி
அகமகிழ்ந்திடுசுகமுமின்குறு மாடையாபர ணங்களு
மாசாரலபி மானமும்மவ ரால்நினைத்தது பலிதமுஞ்
செகதலந்தனி லதிகாரச்சிய லாபமுந்திட தந்தியுஞ்
சேருமேபரி லாபமோடதி செல்வமும்பெறு வார்களே.

பெருகுமுச்ச மடைந்தபென்றொடு பின்புமேசிபர் கூடினும்
பேணியேசுப ரங்கிசத்திடை பெலமதாயிவ னெய்தினுந்
தருமமுற்றிடும் பிரபுநேசமுந் தனம்புவிகளு மூறுமே
தாரணிதனிற் கீர்த்திசேர்தள கர்த்ததத்துவ மெய்திடும்
பொருள்மிகுத்திடு வாய்வுதிக்கினி லுடன்வரும்பிர யாணமே
பூமிமன்னர்கள் பேட்டிவஸ்திர லாபமுந்தன லாபமும்
திருவுரைந்திடு மிவனுறுஞ்சமர் செய்துடன்செய மாருவன்
செகதலங்களை விலைகொடுப்படி சேர்பயோதர மாமினே. 2

சேர்ந்திடும்பணி செண்டிலெட்டினில் சேருமாறினி விரணியன்
சேரிலோசுபர் பாவியானவர் சேருவாரெனி லாபமும்
ஆர்ந்தசொற்பம தாகுமற்பச வுக்கியந்தரு மாதமு
மதிகபீடைய தாகியேயுறு பாவமேல்மன மாகிடுந்
தேர்ந்துரைத்திடி வீனமங்கையர் சேர்க்கைதானுறுமென்றுசொல்
செய்யகேந்திர கோணமுன்றொடு திகிரிலாபம டைந்திடில்
வாய்ந்தராசர்கள் நட்பினல்நர வாகனங்கய மிவுளியும்
வஸ்த்ரபூஷணம் வந்துகூடிடு மாதருக்கொரு திலகமே. 3

மாதுரோடுறு பிதார்சவுக்கியம் வளரும்வித்தைபு ராணநூல்
வரவுகேள்விமி குக்குமாறுவ ளர்வியத்திலு மெட்டிலுந்
தீதுதானுறு நீசநோடுற வாகிவாதியி லேமிகச்
சேர்ந்திடும்மதி மூடமுந்தன தான்யபந்துட நாசமா
மோதிலாதவி யாதிபுத்திர நாசமுற்ற களத்திர
முடன்விரோதம காலபோசன முடகிராசவி ரோதமும்
பாதமீதினில் திகளபந்தன மாகுமென்றப குத்தனர்
பருவமாதர்க ளரசதாயுபர் பங்கயாசன மங்கையே. 4

மங்கையேயிவ னுச்சவங்கிய மாயிருந்தவ னுடனுமே
வந்துமேசுபற் கூடிகாலதில் வரும்பலாபலன் மிகவுமே
பொங்கமாகிய சிவிகைமேதினி புகழ்சவுக்கிய லாபமாம்
புத்திராதிப ருத்திராதிபொ ருந்தியேமிக வாழுவார்
துங்கராசர்கள் கிருபையுண்டகி சோரரார்சத்ரு நாசமாம்
சொன்னபுத்திய துத்தியத்தினி லேமிகுத்திடுங் கட்டமாம்
பங்கமிற்சுப ரானபேர்கடம் பார்வைதானுற வேசுகம்
பாலநாமொழி சேலதாமவிழி பவளமாமிதழ் மடமினே. 5

வேறு

பவமிகுமிரண்டேழுக்குப் பதிநுருவாகினுக்கா
லவமிருந்துடனேசேரு மரிசகத்திரநாமத்தோ
டுவமையிற்றுர்க்காதேவி தனக்குமர்ச்சனையுஞ்செய்ய
பவமெலாமகன்றுநல்ல பாக்கியம்மாகும்மாதே. 6

ஆக விருத்தம்-313.

## புதன்திசைப் படலம்

மாதுடையபுதன்திசைதான் பதினேழாண்டாகும்
வருங்காலமங்கையர்கள் சம்போகம்வித்தை
நீதமுறுநவரத்ன மாலைமிகுலாபம்
நீங்காதசவுக்கியமுண் டாகுமுச்சத்தேனும்
கோதகலுஞ்சொஸ்தேஷத்திர மடைந்தாலும்வித்தை
குறைவில்லாமற்கொடுக்குந் தனதான்யலாபந்
நீதகலும்வியாபாரம் பூமிபுத்திரருடனே
திகழும்வஸ்திராபரணமிக லாபமெனச்செப்பே. 1

செப்பியதோரிரண்டினிலே யிவனிருந்தாற்றனே
செயமானவில்வித்தை லாபமிகச்சேரும்
ஒப்பரியதளகர்த்தர் சிவிகைசங்கீதங்க
ளுயர்வாத்தியக்கேள்வியுண்டா மூற்றகேந்திரத்தில்
தப்பிதமில்லாத்திரிகோ ணத்திருந்தாலதிக
சவுக்கியமுங்கீர்த்தியுடன் றரணிமிகக்கிடைக்கும்
இப்புவியில்புராணநூல் வித்தையெல்லாம்படிப்ப
னிடையொடியாபுடைத்தெழுந் தவிளமுலைபெண்ணரசே. 2

பெண்ணேகேளொன்பதாமி டத்தினிலுற்றாலும்
பெலமானபாக்கியத்திற்கு டையவனோடேனும்
வண்ணமிகுபாக்கியத்தோ னங்கிசத்திற்பத்தில்
வதிந்தவனோடுற்றாலும் வளருமிலக்கினத்துக்
கெண்ணமிகுமதிபதியா யிருந்தாலுங்கேந்ர
மிசைந்தாலுஞ்சிவிகைதந்தி யிவுளிமிகலாபங்கள்
திண்ணமுறுங்களத்ரபுத்திர லாபமுண்டாமென்று
செப்பினர்கள்செணிதமெல்லாந் தேர்ந்துரைசெய்தவரோ. 3

மணிதமாஞ்சட்டாட்டவியத்தி லிருந்தாலும்
கருதரியநீசாஸ்தமனமாறிலேனுந்
துணிவுடனேயிவனிருந்தாற் றனதான்யநாசஞ்
சொல்லும்விபசாயகஷ்டங் களத்திரமும்நாச
மணியாருந்திசையாதி தனதான்யலாப
மாநடுவில்ராசசன்மானங் கிடைக்குங்கடையில்
பிணிசேருமிட்டசன விரோதமுண்டாமென்று
பேசினர்கள்கற்றுணர்ந்த பெரியவர்கள்தானே. 4

ஆக விருத்தம்-317.

---

## புததிசை புதன்புத்தி

கற்றுணர்ந்தோன்றிசைதனிலே தனதபகாரந்தான்
கழித்ததிங்களிருபத்தெட் டிழுபத்தேழ்நாளாம்
மற்றவன்றன்புத்திவரும் போதிலாரோக்கியம்
வஸ்திரபூஷணஞ்சிவிகை மகவுவிபசாயம்
உற்றதனலாபமொடு வித்தியாலாபம்
உயர்பந்துசனக்கீர்த்தி ராசாபிமானம்
பற்றலர்மார்பினிலுருவும் வேல்போன்றவிழியாய்
பராசரமாமுனியுரைத்த பலன்களிதுவாமே. 1

பலனிலாச்சட்டாட்ட வியத்திலிருந்தாலும்
பாவியுடன்கூடிடினுந் தனதானியநாசங்
குலமதிலேபந்துசன நாசமுறும்பின்னே
குன்பமொடுபெருவிலங்கும் கூடமதுசேர்வன்
றலமன்னர்விரோதமதாற் றனநாசமாகும்
தனித்தவுச்சமொாக்ஷேத்திர கோணகேந்திரத்தில்
நிலைமைபெறுலாபத்தி லிருந்தாலும்பலனை
நிகழ்த்திடக்கேளுபயதன நெருங்கிப்பொற்கொடியே. 2

தனதான்யவஸ்திரா பரணத்தோடதிகத்
தாரணியும்புத்திரரும் லாபமிகவுண்டாம்
மனராலேபேட்டியுண்டு சமரதனில்வெல்வன்
வாத்தியசங்கீதமிகு லாபமிகவுண்டாங்
கனமானசந்தோஷம் பிதுமார்சுகமாம்
கருதுபந்துசுகமுடனே கனசிவிகைலாப
மனமானநடையுடனே சிறுமருங்குளொசிய
வளர்ந்தெழுந்துதிரண்ட முலையரிவையருங்கரசே. 3

வேறு

அரிவையையுடையோன்வாக்கே ழதிபதியாகினுக்கால்
வருகளத்திரநாசந்தான் மாறிடப்பரிகாரங்கேள்
குருமொழிப்படியேமாயன் சகத்திரநாமங்கூறிற்
றிருவளர்மாதேமிக்க செல்வமுஞ்சுகமுண்டாமே. 4

ஆக விருத்தம்-321.

---

## புததிசை கேதுபுத்தி

உண்டானபுதன் றிசையிற் கேதபகாரந்தா
னுறுமாதம்பதினொன் றுநா ளிருபத்தேழாந்
தண்டாரும்புதனுக்குச்சிகி யந்தர்க்கதனுத்
தானிருக்கத்திரிகோண கேந்திரத்தற்றுலுங்

கொண்டாடுஞ்சுபனுடனே கூடினும்பார்த்தாலுங்
குறித்தலக்கினாதிபனோடே கூடினாலுஞ்
செண்டாருமுலைமடமாயதின்பலனைவகையாய்ச்
செப்பக்கேள்மைக்கருங்கண் டெரிவை ருக்கரசே. 1

செயமாகுமற்பசவுக்கிய மற்பலாபஞ்
சேர்ந்தபந்துசனசுகமாந் திரவியமும்லாபம்
நயமானநாற்காலி லாபமேற்றிசையில்
நற்பயணமாசர்கடம் பேட்டியுமுண்டாகும்
வயமீறுஞ்சமாதனி லதிகசெயமுண்டாம்
வருமாறெட்டீராறில் வதிந்திருப்பானேனும்
பயமீறும்பாவியுடன்கூடிடிற் பார்த்தாலும்
பலாபலனைவகைவகையாய்ப் பகுத்துரைசெய்வாயே. 2

வறிவரும்வாகனத்திற் றவறிவீழ்ந்திடுவ
னிராசராற்சோரரா லக்கினியாற்பயமாம்
வீறுசேர்புத்ரப்பயந் தேளிடபமதிலே
வீற்றிருப்பானாகிலதி பயம்நீசனுடனே
சேரில்வருங்கலகமிரண் டேழிலிருப்பானேற்
றேகபயம்பரிகார மேழைகளுக்குணவு
மாறுமற்றானமதுசெய் திடவேதோஷ
மகன்றுவிடும்பாராசர்சொன்ன வகையிதுவுமாமே. 3

ஆக விருத்தம்-324.

---

## புததிசை சுக்கிரபுத்தி

குவலயத்திற்புதன்றிசையிற் புகரபகாரந்தான்
குறித்தமுப்பானால்மாதங் கூடுமதின்பலன்கேள்
தவமுடையகனக்கனுக்கந் தர்க்கதனுய்ப்புகர்தான்
சார்ந்திடினுங்குருவுடனே தான்கூடினாலும்
கவலையுறுன்புராணமுதற் கேள்விகளாராய்வன்
காவலர்கள்சன்மானம் நாற்காலிலாபம்
நவநிதியந்தீவுகளிலிருந்து வந்துசேரும்
நளினமுலையனையதன நங்கையருக்கரசே. 1

நங்கையருக்கரசேதான் கன்னிதேள்சிங்கம்
நல்லதனுமேடத்திற் புகர்மேவினாக்கால்
தங்குதலைவலைகாய்ச்சல் நோய்களத்ரசண்டை
தான்வடக்குத்திசைகமனங் காவியினாற்சீவன்

மங்கிடுமோவியுடன் கூடிடுவானாகில்
வருமற்பசவுக்கியங்க ளுண்டாமென்றுரைப்பாய்
செங்கமலப்போதிலுறை செந்திருவைப்போலாய்ச்
செகதலத்திலதிவாழ்வு சேர்ந்திடும்பெண்கொடியே. 2

சேர்ந்திடுநற்கேந்த்ர திரி கோணலாபத்திற்
செயமாகவிருந்திடினும் பிலவான்சேர்ந்திடினும்
பார்ந்தமுறவுச்சசொஸ்ேத்திரத்தையடைந்தாலும்
பகர்பூமிலாபமுடன் ராச்சியமும்லாபம்
வேந்தருடசன்மானம் விபசாயலாபம்
வெகுதான தர்மமுடன் றடாகப்பிரதிட்டை
தேர்ந்துரைக்கில்நடைகிணறு புதிதாகச்செய்வன்
திருவுமவன்மனைதனிலே சென்றுறைவள்தானே. 3

வேறு

உரைத்திடும்வாக்கேழுக்கே யுடையவனிவனேயாகிற்
றரைதலந்தனிலேபீடை தானுறும்பரிகாரந்தான்
வரைத்தன தூர்க்காதேவி செபஞ்செயமாறிப்போகும்
அரைத்தசந்தனச்செஞ்சேற்றை யணிமுலைமடநல்லாளே. 4

ஆக விருத்தம்-328.

---

## புததிசை சூரியபுத்தி

நல்லதொருபுதன்றிசையில் ரவிபுத்தியதுதான்
நவின்றதிங்கள்பத்துடனே நாளாறதாகும்
வல்லபஞ்சேர்சவுமியற்கு ரவியந்தாக்கதனுய்
வந்தாலுமுச்சசொஸ்ேத்திரத்தையடைந்தாலுஞ்
சொல்லரியசவுக்கியமாம் ராசாபிமானந்
தொலையாதபாக்யமுமுஞ் சேய்பார்ப்பானாகில்
வல்லிநிகர்பூண்முலையாய் புவிலாபமென்றே
வகுத்துரைத்தார்கணிதநூல் வகுத்தபெரியோரே. 1

மறைவில்லாலக்னாதி பதிநோக்குற்றுக்கால்
வளர்சவுக்கியந்தனலாப மந்தியமந்தியத்திற்
குறையாமல்வளர்ந்தேதறுஞ் சனிசெவ்வாய்ராகு
கூடியிடிற்பாவர்கடங் கொடும்பார்வைசேரிற்
றறைமீதில்மனவியாதி யுடன்தேகபீடை
தனச்செலவுஉற்றசனப் பீடையுமுண்டாகும்
பிறைபோலுந்தனுப்போலு வளைந்ததிருநுதலாய்
பெரும்பலனையிப்படியே பேணியுரைப்பாயே. 2

பேணுதசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
  பிழைசேருமுச்சசொகேஷத் திரத்தையடைந்தாலும்
வீணுனசோராக்னி பயங்கிரகப்பெயர்ச்சி
  விஷபீடைநாற்காலி யாற்சீவனுசம்
பாணுருமொழிமாதர் பிதுர்நாசமுடனே
  பகருமதிகாரமுறு மிரண்டேழுதனக்குச்
சேனுருமிரவிபதி யாகிலவமிருத்துத்
  தீரபரிகாரம்ரவி நமஸ்காரஞ்செய்யே. 3

ஆக விருத்தம்-331.

---

## புதகிசை சந்திரபுத்தி

காராளன்றிசையதனிற் சசியுபகாரந்தான்
  கருதுபதினேழ்மாதங் கனமுதியன்றூனும்
தாராளமாய்ப்புதர்க்க தர்க்கதனுயிடினுந்
  தனித்தவுச்சகேந்திரசொட் க்ஷேத்ரதிரிகோணம்
நேராகவிருந்தாலுஞ் சுக்கிரனுக்குறினும்
  நிதமதிகசவுக்கியமா மதிகதனலாபஞ்
சீராருமரசரபி மானமுடன்களத்திரந்
  தீர்க்கபுத்ரலாபமுடன் சிவிகைவருமின்னே. 1

சிவிகையுடன்புதுக்கிரக முண்டாகுமதிகச்
  சிறப்புறுபோசனவாத்திய லாபமுடன்சேரும்
புவியதனிற்றென்றிசைப்ர யாணமதுகூடும்
  புகழரசர்பேட்டிவருந் தீவாந்திரவஸ்துங்
கவிகையுடன்க்ஷேத்திராதி லாபமுமுண்டாகுங்
  கனமதிநீசஞ்சத்ரு ஸ்தானமடைந்தாலும்
குவிமுலையாயாறெட்டி ராறிவிலேயகிக்
  கொடும்பாவர்நோக்கில்மதி குறைந்தாலுங்கேளே. 2

குறைவாகுந்தவநாசங் கிரகம்போம்பயமே
  கூடிவரும்பீடையுறு மனத்தாபமுண்டாந்
தறைமீதிலிவனெடுத்த காரியம்விக்கினமாந்
  தரணிமன்னராலமைச்ச ராற்கனவிரோதம்
நிறையாகுஞ்சமாதனி லபசெயமுண்டாகும்
  நேரானமித்ருபந்து சனச்சேதமுண்டாம்
மறைதேரும்பராசரமா முனியருளிச்செய்த
  வடநூலிற்கண்டபடி வரும்பலன்சொன்னேமே. 3

பலனுகச்சுபக்கிரகஞ் சசியுடனேகூடிற்
  பூாக்கியத்தோடதிகசுகம் பகர்கேந்திரகோணம்

தலமீதிலிருந்தாலும் லாபமடைந்தாலும்
　　தனித்தமித்ரக்ஷேத்திரந்தி லுச்சத்திலேனிற்
குலவியிருந்தாலுமகா புண்ணியதீர்த்தங்கள்
　　கொடுக்குமன்னர்சன்மானஞ் சந்தோஷமுண்டாம்
நிலைமைபெறுமதிகவித்தை கற்றிடுவனெனச்சொல்
　　நேரிழையர்க்கதிகவெழில் நிறைந்திடுபூந்திருவே. 4

வெய்யதொருசட்டாட்ட வியந்தனிலேசசிதான்
　　வீற்றிருக்கவவனுடனே பாவிகள்சேர்ந்திருந்தால்
வையகத்திலதிகட்டம் சுபசந்திரனுகில்
　　வருமந்தபுத்தியினி லதிகசவுக்கியமூந்
துய்யகளத்திரபுத்ர சவுக்கியத்தினுடனே
　　சொலும்பூமிலாபமொடு சுருதிமறையோதுஞ்
செய்யபெரியோர்பத்தி யுடையவனுமென்று
　　செகதலத்தோரறிந்திடவே செப்பினர்கற்றோரே. 5

செப்புகின்றசசிபுத்தி யாதியிலேயதிகச்
　　செல்வமுண்டாமத்தியத்திற் சவுக்கியதனநாச
மிப்புவியிலந்தியத்தி விராசவிரோகத்தோ
　　டேபீடைமாதுருநா சங்காட்டுமிடியாற்
றப்பில்லாப்பயமுடனே தலைவலியுங்காச்சல்
　　சசியிரண்டேடமுக்குடையோ னுகில்வரும்பீடை
மைப்பழகும்விழிதூர்க்கா தேவிசெபம்செய்தால்
　　மாறுமவையிருந்துவென வழுத்திடுபூங்குயிலே. 6

ஆக விருத்தம்-337.

---

## புததிசை செவ்வாய்புத்தி

புதன் திசையிற்செவ்வாயின் புத்தியுடகாலம்
　　பொருந்துதிங்கள்பதினொன்று நாளிருபத்தேழாம்
அதன்பலன்கேள்கணக்கனுக்குத் துசனர்ந்தர்க்கதனு
　　யமர்ந்தாலுங்கேந்திரகோ ணத்தையடைந்தாலு
மிதம்போலுச்சசொக்ஷேத் திரத்திலிருந்தாலு
　　மிலக்கினுதிபனுடனே கூடியிருந்தாலும்
மதன்றனக்குவாய்க்காதி தேவியுமாகியுமே
　　மனநாணவெழில்மிகுத்த மாதர்சிரோமணியே. 1

மணியாரம்புனைராச சன்மானமுண்டா
　　மனையதனிற்றிருவாழு மகாகளத்திலாபந்
தணிவாகிட்டமுறும் ராச்சியலாபங்கள்
　　தனையர்களுமிகலாபந் தான்விபசாயத்தி

லணிதான்யலாபமுறும் நீசச்சத்துருவிட்
டாதிபனைக்கூடுகினு மாறெட்டீராறிற்
துணிவாகவிருந்தாலும் பாவிகூடினுஞ்
சொலும்பாவர்பார்த்தாலும் தொடர்பலனைக்கேளே. 2

தொடருமேதலைவலிநோய் குளிர்காச்சலுடனே
துரைராசர்விரோதமுறுந் தனதான்யநாசம்
படருமேகளத்திரத்தால் வெகுகலகந்தானும்
பலுகிடுநாற்காலியது மிகுநாசமாகுந்
திடமுடனேபீனிசமு மண்டையிடியுண்டாஞ்
சிரந்துகுடியிருக்குமனை தான்போகுமென்றே
வடகலைநூல்முழுதுணர்ந்த பராசரமாமுனிவன்
வாக்கியத்திற்கண்டபடி தப்பாதுமயிலே. 3

தப்பாதகேந்திரகோ ணந்தனிலேயேனுந்
தான்மூன்றுபன்னொன்றி லேனுமிருந்தாலும்
பொய்ப்பாவியுடன்கூடி னுமதிபயமாம்
புகல்மாதுர்நேசமுடன் மனவியாதியடையு
மிப்பாரிலிவனெடுத்த காரியம்விக்கினமா
மீசையும்பகீர்த்திசுர மிருப்புவிலங்காகுஞ்
செப்பார்பூண்முலையால்நாற் காலியதுநாசஞ்
செழுஞ்சுபர்நோக்குறிற்சவுக்ய சுகமற்பமுறுமே. 4

உற்றதொருசட்டாட்ட வியத்திலிருந்தாலு
முறும்பாவியுடன்கூடி னுமதிகஷ்டம்
பெற்றதாயுடனுசம் ரணபீடையுடனே
பெரிதானவிலங்குவரு மிராசராற்றீயால்
மற்றுமிகுகள்ளரால் வருமதிகப்பயந்தான்
வளர்பந்துசனத்துடனே சகோதரமுநாசங்
குற்றமில்லாப்புத்திரரும் களத்திரருநாசங்
குறித்துரைக்கிலதிசார ரோகமுமுண்டாமே. 5

உண்டாகுமிரண்டேழுக் கிவனுசனுகி
லுறையுமவமிருத்துபய முண்டதற்குத்தானும்
கொண்டாடுஞ்சுப்பிரமணியருக்குப்பூசை
குறித்தபடிசெய்திடவே குணமதுவுமுண்டாம்
பண்டோர்கள்சொன்னபடி வாராதுசொன்னேன்
பகர்பலன்போய்மிகுசுகமும் பாக்கியமுமுண்டாம்
வண்டாரும்பூங்கூந்தல் மங்கையருக்கெல்லாம்
வாய்த்திலகம்போன்று வளருமிளந்திருவே. 6

ஆக விருத்தம்-343.

---

## புததிசை ராகுபுத்தி

திருமதிக்குமகன்றிசையில் ராகுபுத்தியதுதான்
செப்புதிங்கள்முப்பதுட னாள்பதினெட்டிதற்கு
வருமிருத்தகணக்கனுக்குப் பாம்பந்தர்க்கதனாய்
வந்திருந்தால்விடஞ்சோராக் கினியதனாற்பயமாம்
பொருகளத்திரநாசமுறுங் களத்திரத்தினாலே
போராட்டமுண்டாகுந் தனதான்யநாசந்
தருமதிகப்பீடையுட னகாலபோசனமே
தான்கிடைக்கும்மரணபயந் தனிக்கிரகம்போமே. 1

தனித்தமூன்றாறுபத்துப் பதினொன்றிலேனுஞ்
சார்ந்தசுபர்கூடிடினுந் தானியலாபங்கள்
மனத்தினிலேசந்தோஷம் ராசாபிமானம்
வஸ்திராபரணமுத னாற்காலிலாபம்
புனத்துறையும்புண்யதீர்த் தந்தானங்கிடைக்கும்
பொருந்துமகாசவுக்கியமுந் தேகவாரோக்யங்
கனத்தபெரும்பாவியுடன் கூடிடினும்பவராற்
கடும்பார்வையுற்றிசத்ரு நாசமெனக்கருதே. 2

நாசமுறுங்கடகசிங்கங் கும்பமாதத்தில்
ராசபயஞ்சண்டையினி லபசெயமுண்டாகும்
பேசரியசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
பெலத்தகேந்திரகோண லாபமதுற்றாலும்
பாசமுற்றப்பாவியுடன் கூடினும்பார்த்தாலும்
பாராசர்விரோவிமுடன் மனைபாழதாகும்
கூசிவிடுமனவியாதி தனதான்யநாசங்
கூறுமிஷ்டசனப்பகையுங் கொடுக்குமின்னங்கேளே. 3

கொடுக்குமேமார்பதனிற் குத்துடனேகுன்மங்
குறித்தசமாதுதனிலே மரணமதுகாட்டும்
நடுக்குமேயுறும்வாக்குக் கேழினுக்குமினே
நாதனையாளுக்கா லவமிருத்துபயமாம்
மடுக்கண்ணாள்மகாதுர்க்கை செபமதுதான்செய்தால்
வருமநாசுகமுடனே வாழ்வுமிகவுண்டாம்
உடுக்கைநேர்ந்திடுமிடைதள் ளாடிமிகவாடி
உயர்ந்துவிம்மிப்புடைத்தெழுந்த வுபயதனமாதே. 4

ஆக விருத்தம்-347.

---

## புததிசை குருபுத்தி

தனதானபுகன்றிசையிற் குருவினபகாரந்
 தன்மாதமிருபத்தேழ் நாளாறுதனிலே
கனமானபுலவனுக்குக் குருவந்தார்க்கதனுய்க்
 கதித்திருக்கிற்றனலாப மதுமிகவுண்டாகுஞ்
சொனசேயினுடன்கூடி னுலதிகச்சண்டை
 சொற்கேதுவுடன்கூடி யிருக்கில்மன்னர்விரோத
வினைநெருஞ்சிற்றிடைப்பெண் ணமுதராசத்தேனே
 விளம்பினர்கள்சோதிடத்தில் மிகமிகவல்லோரே. 1

வல்லதொருவுச்சமொசாகேஷத் திரந்தனிலேயேனும்
 வளர்கேந்திர திரிகோண லாயத்திலேனும்
நல்லதொருகுருவிருந்தா லதிற்றேகசவுக்யம்
 நாடுசுபசோபனமும் பாலனமும்புசிப்பன்
சொல்லரியவாதிபுத்தி நல்லசவுக்கியமாந்
 தூயகதிஸ்தானமும்புத் திரலாபமுண்டாம்
பல்பலபூஷணலாப மிகக்கிடைக்குமென்று
 பகர்ந்தனர்சோதிடநூலின் பலனையுணர்ந்தோரே. 2

சோதிடராராய்ந்தபடி குருநீசனுகத்
 தோன்றிடினுமஸ்தமனஞ் சட்டாட்டவியத்தில்
மாதிடமாயிருந்திடினுஞ் செவ்வாயும்ராகு
 மந்தனுடனிவன்கூடி மருவியிருந்திடினுங்
கோதுடையசண்டைவரு மாதுர்பிதுர்பந்து
 கொடுநாசம்ராசசோ ராக்கினியாற்பயமாந்
தீதுபுரிதலைவலியுங் காச்சலுமுண்டாகும்
 செகமன்னராற்முன்ய நாசமுறுந்தானே. 3

நாசமுறும்விபசாய வகையினாற்பூமி
 நாசமுறுமனவியாதி யதுமிகவுண்டாகும்
நேசமுறுங்கேந்திரகோ ணத்தையடைந்தாலும்
 நீங்காதமூன்றுபதி னொன்றிலிருந்தாலும்
ஆசையுறுசிவபூசை தேவகுருபத்தி
 அதினுடனேயகப்புரிவந் திகழ்சந்தோஷமுமாங்
காசினியிலிவன்படித்த வித்தையினாற்சிவிகை
 கனலாபமுண்டெனவுங் கருதிடுபெண்ணாசே. 4

கருதியதோர்பாவியுட னிவன்கூடினாலுங்
 கடும்பாவிபார்த்தாலு மார்பதனிற்குத்தோ
டரிமையுதும்புத்திருக் கதிநாசமாகு
 முள்ளமதுபாவத்திற் சொல்லுமனவியாதி

வருமரசர்பயமுண்டாஞ் சட்டாட்டவியத்தில்
வலிகெட்டுத்துற்பலனுய்க் குருவடைந்தானுகிற்
பரிவுடனெக்காலமுமே யபகீர்த்திகளத்திர
பயம்புத்திரதனநாசஞ் சத்ருபயமுறுமே. 5

வேறு

பயமுறுமிரண்டேழுக்குப் பதிகுருவாகினுக்கால்
நயமிலைபரிகாரந்தா னவிலக்கேழ்பராசர்வாக்காய்
இயல்புறுஞ்சிவசகஸ்ர நாமமேயியற்றினுக்காற்
கயலெனவிழிசேர்மாதே கனசுகமாகுந்தானே. 6

ஆக விருத்தம்-353.

---

## புததிசை சனிபுத்தி

ஆகுமிந்தப்புதன் திசையிற் சனியபகாரந்தா
ஞன திங்கள்நாலெட்டு நாளொன்பதாகும்
வாகுபெருஞ்சவுமியற்குச் சனியந்தர்க்கதனுய்
வதிந்திருக்கிற்சண்டையினுல் மனச்சலனமுண்டாம்
போகுமவன் றிரவியமு மரசர்பயத்தாலே
புகழில்லாப்பாவமதி லவன்மனதுசெல்லுஞ்
சோகமுறும்பயமுண்டா மெனக்கணிதந்தேர்ந்த
சோதிடர்களுரைத்தபலன் சொல்லிடுபூங்குயிலே. 1

சொல்லாயவுச்சசொஸ்க்ஷேத் திரத்திலிருந்தாலுந்
தோன்றியமூன்றுறுபதி னென்றையடைந்தாலும்
நல்லலக்கினதிபதி நோக்கமுற்றாலுந்தான்
ராச்சியலாபமுமதிக சுகங்களுமுண்டாகும்
வல்லமைசேரிரணியனுல் நோக்கமுற்றுநின்றால்
வருமதிகத்தளகர்த்த மதிகசுகம்பெருகும்
அல்லவெனிற்சுபர்நோக்க முற்றாலும்நன்மை
யதிகவித்தைலாபமதி கீர்த்தியுமுண்டாமே. 2

வேறு

மேதினியதனிற் சுபாங்கிரந்தனிலே மேவியேசனியிருந்தாக்காற்
சேதுவிற்றனம் புரிகுவனிந்தச் செழுஞ்சனிபுத்தியந் திபத்தில்
மாதுயாடைவன் காரியநாசம் வந்திடுமதிகமாம் பயங்கள்
சாதகன் றனக்குந் தேகபீடையுமாந் தலமனநோயதுற் றிடுமே. 3

வேறு

உற்றிடும்வாக்குக்கேழுக் குடையவனுனல்தீது
பற்றிடுமவமிர்த்தாம் பயமதுவிலகவென்றால்

பெற்றிடுஞ்சனிநாள்நோம்பு பேணிமண்டநாள்நிற்க
பற்றிடாத்தோசமென்று பாராசரமுனிசொன்னரே.

ஆக விருத்தம்-357

---

## கேது திசைப்படலம்

### வேறு

மறையுங்கேது மகாதிசையானது
தறையிலேழ்வரு டப்பலன்றன்சொலிற்
குறையுமேபொருள் குறைதிடுந்தாரமு
முறைசெய்பாச பயமுமுண்டாகுமே. 1

பயமிலாக்கள்ள ரக்கினியாற்பயம்
நயமில்பீடைசரீரத்தில்நண்ணிடும்
செயமிகுந்தமூன் றாறுடன்பத்திலே
நியமமாகநின் றாற்பலனீசொல்லே. 2

சொல்லருஞ்சுத ருந்தன தானியம்
நல்லதோர்விப சாயமும்லாபமாம்
வல்லகேந்திர கோணமுற்றிற்பல
மில்லையெண்ணி விதிங்பலன்கேண்மினே. 3

பலிதமில்மிரு கப்பயமன்னரால்
வலிகொள்சோரர் வருகுந்தீயாற்பயம்
கலியுங்குன்மம் பயித்தியம்நண்ணிடுஞ்
சொலினுமிட்ட சனந்துயர்சூழுமே. 4

மேவுமூன்றினி லாபத்தில்மேவிடில்
ஆவல்சேரு மதிசுசுகத்தொடுங்
காவல்சேர்ந்திடுங் காசினிலாபமாம்
பூவிலேவிப சாயம்பொருந்துமே. 5

பொருந்துமேநர வாகனம்பூணணி
முருந்துமூரல் கதிரதிரமும்முறுந்
திருந்திடுந்திசை யாதிசுகம்நடு
வருந்திடும்பய மென்றுவகுத்திடே. 6

வகுத்தராசர் பயம்வருமந்தத்திற்
பகுத்தவொன்பது பத்துக்குமேயிவன்
மிகுத்தவாதிப னுகவுமேவினுந்
தொகுத்தலக்கினத் தோனுடன்கூடியே. 7

கூடிநின்றிடிற் றுனியங்கோகுலங்
சாடிடிடும்பல ராசர்சம்பத்துடன்

தேடிடும்பொருள் யாவுஞ்சிதறந்திடும்
வாடிடும்மிடை மங்கைர்தங்கமே. 8

ஆக விருத்தம்-365.

---

## கேதுதிசை கேதுபுத்தி

வேறு

தங்கியதோர்கேதுதிசை தனிலவன்றன்புத்தி
தான்மாதம் நாலுடனே நாளிருபத்தேழாம்
பொங்கமுடனெண்பதுபத் தக்குடையோனுடனே
பொருந்திடும்லக்னதிபதி யுடன்சேர்ந்தாலுந்தான்
பங்கமில்லாப்புத்திரத்தா னத்துடையோனுடனே
பதிந்திடினுஞ்சுபக்கிரகப் பார்வையுந்தானுலேனுங்
துங்கநதிதீர்த்தம்விப சாயசிவபூசை
சொல்லரியதனதான்ய லாபமிகவருமே. 1

சொல்லரியபாக்கியத்தா னத்தானைக்கூடிற்
சொனுஞ்செவ்வாயுடன்கூடிற்சமரில்மிகுசெயமாம்
வல்லதொருராசசன்மா னங்களுமுண்டாகும்
வருந்தடாகந்தரும மாதிபலசெய்வன்
நல்லதொருகிரகமதிற் றிருநிறைந்துவாழும்
நாடியேகேந்திர திரிகோ ணத்தையடைந்தாலுஞ்
சில்லரைசேர்சட்டாட்ட வியந்தினிருந்தாலுஞ்
செழுங்குயிலேயதன்பலனைச் செப்பிடுவன்கேளே. 2

செப்பியதோர்தனநாச மனவியாதியுடனே
சேர்ந்தகளத்திரநாசம் புத்திரரும்நாசம்
ஒப்பரியமனையாளாற் பிராணபயமுண்டா
முகந்தபந்துசனநாச முழுமிரண்டேழுக்கு
இப்படியிலிவதனுகியேபாவி
யிவனுடனேசேர்ந்திருக்கி லவமிருத்துபயமாம்
மைப்படியுங்கண்ணுப்கேள் பரிகாரமதுதான்
மகேசுராபூசையும்புரியமா பயந்தீர்ந்திடுமே. 3

ஆக விருத்தம்-368.

---

## கேதுபுத்தி சுக்கிரதிசை

திடமானகேதுவினிற் சுக்கிறனுர்புத்தி
சேர்ந்தபதினெல்மாத மதிற்பலனைக்கேளாய்
அடைவானகேதுவுக்குக் கவியந்தர்க்கதனே
யானுலுங்கேந்திரகோ ணங்களிலேயேனும்

உடலான்லாபத்தா னத்திலேயேனு
 முறுதியுடனிருந்தாலுந் திசைநாதனிருந்த
விடம்நாடிப்பதிந்தாலுங் களத்ரபுத்ரநாச
 மிராட்சியமுமசவகெச லாபமுமுற்றிடுமே. 1

உற்றுவரும்பாக்கியத்தா னத்தோனைக்கூடி
 லுயர்ந்தசம்பத்துண்டாகும் நீசாஸ்தமனமே
பெற்றவனேனுடிருந்தாலும் பாவிகூடினும்
 பெரும்பாவிபார்த்தாலு மிராசவிரோதமுமாம்
நற்றனதானியநாச மிடியினுலாவால்
 நடுக்குபயமுண்டாகு மனவியாதிசேருங்
கற்றவர்களுவமான மதற்கடங்காதெழுந்து
 கண்கருத்துபுடைத்திளகுங் கனத்ததனமயிலே. 2

கனத்தகேந்திரகோண மதனிலிருந்தாலுங்
 கதித்தமூன்றோன்பானி லேவதிந்திட்டாலும்
நினைத்தகாரியஞ்செயமாந் தேகவாரோக்யம்
 நீணிலத்திலாடையா பரணமிகலாப
மனத்துடனேபால்பழமு நிதநிதமும்புசிப்பன்
 வருமூர்க்கூர்சவுக்யதன லாபமத்தியத்தில்
தனத்திலற்பநாசமுறு மந்தியத்திலேதான்
 தன்மனைபோங்குலநாச மரசர்பயமுறுமே. 3

நாசமில்லாச்சட்டாட்ட வியம்வாக்கிலிருந்தால்
 நற்சுக்ரபுத்தியினி லதிகசவுக்கியமாந்
தேகசுகங்களத்ரபுத்ர சவுக்கியமுமுண்டாகுஞ்
 செகதலத்திற்றனதான்ய லாபமிகவாகும்
ராசராலபிமான மிரண்டேழுக்கிவனே
 நாதனுமிருந்தாக்கா லதிபீடையுண்டாந்
தோஷமதுமிகத்தீரப் பரிகாரமதுதான்
 துர்க்கைக்குப்பூசைசெய்ய சுகமிகவுந்தருமே. 4

ஆக விருத்தம்-372.

---

## கேதுதிசை சூரியபுத்தி

தருங்கேதுதிசையிலா தித்தனபகாரந்
 தானுலுமாதமுட னுளாறதாகும்
வருங்கேதுதனக்கிரவி யந்தர்க்கதனுக
 வதிந்திடினுமுச்சசொக்ஷேத் திரத்தையடைந்தாலும்
இருஞ்சுபர்கள்கூடிடினுஞ் சபர்பார்த்திட்டாலு
 மிராசவனுக்கிரகமுடன் ராசசன்மானங்கள்

பொருஞ்சணைவடிவாளை யெழில்வேலைப்பழித்து
புருடர்திருமார்பதனிற் பொருங்கருங்கண்மயிலே. 1

கருதியதோர்சட்டாட்ட லியத்தனிற்கேந்திரத்திற்
கருத்ததிரிகோணமதில் நீசாங்கந்தன்னில்
வருசோதியினிற் பருதியிருந்தாக்கால்
மண்டையிடிதலைவலிநோய் சுரபீடைகாட்டும்
பரிவானகளத்ரபுத்ர பீடைமிகவுண்டாம்
பகர்மாதுர்நாசம்பர தேசகமனமுமே
பொருந்துசோராக்கினியால் விடத்தாலும்பயமாம்
புகழ்காலிமிகநாசம் புகன்றிடுபெண்ணரசே. 2

பெண்ணேகேளிரவிபுத்தி யந்தியத்திற்சுகமாம்
பெருமிபலிகூடிடினு நீசன்கூடிடினுங்
கண்ணகுமிரண்டேழுக் குடையவன்சேர்ந்தாலுங்
காலமிர்த்துபயமதற்குப் பரிகாரம்புகல்வேன்
விண்ணுடர்பணிந்தசிவ பூசைசெய்துதுர்க்கை
மிகப்பூசைசெய்ததன்பின் வெய்யோனுள்நோம்பு
எண்ணுநாள்பட்டு மிருந்திடவெப்பவமும்
இரவிகண்டபனியெனப்போ மெனவிசைத்தார்மெய்யே. 3

ஆக விருத்தம்-375.

---

## கேதுதிசை சந்திரபுத்தி

மெய்யார்செங்கேதுதிசை தனிற்சசிபின்புத்தி
மேவியதோரேழ்மாத மதன்பலனைக்கேளாய்
பொய்யாதசசிகேதுக் கந்தர்க்கதனுகிப்
பொருந்திடினுமுச்சசொந்தத் திரிகோணத்தேனுந்
தொய்யாதகேந்திரத்தி லேனுமிருந்தாலுஞ்
சுபனுடனேகூடிடினு மதிகசுகமுண்டா
மையிலகுஞ்சேல்விழியா யடவர்களுயிரை
வாங்கியவர்தமைமருவு மங்கையாஞ்சுகமே. 1

சுகமாகுந்தனலாப மிராசசன்மானங்கள்
சோபனகல்யாணமுட னுடையாபரணம்
மிகலாபம்பரிலாபந் தேவாலயங்கள்
மிகுத்ததடாகங்களுடன் கட்டிடங்கள்செய்வன்
அகமோடுபுவிலாப மாகுமிர்தச்சசிதா
னதிககலைநிறைந்திருக்கி லதின்பலன்முன்போலாஞ்
செகமீதுநீசனுய்த் தேய்மதியமானற்
சிலசவுக்கியமனநோயி சேருமின்னக்கேளே. 2

சேருமொருவாக்குத்தா னத்துடையோன் றன்னைச்
செலுமதியங்கூடியிடிற் றேகசாட்டியயமாங்
கூறியிடுமனநோயி தாலுண்டாமிதற்குக்
குறித்தபரிகாரமது குகன்பூசையாற்போம்
ஆறுடனேயெட்டுவிய மதிற்சுபனேக்கூடி
லதிகசுபன்பார்த்தாலுஞ் சோபனங்கள்நடக்கும்
நேரும்நற்றருமசிந்தை யாதிபுத்திசுகமே
நிலைக்குநடுசொற்பசுபங் கடையினிற்றீதாமே. 3

ஆமேகேந்திரகோண லாபத்தானத்தை
யடைந்தாலும்பலவான்க ளுடன்கூடினாலும்
பூமிதுவிபசாயலாபம் வித்தைலாபம்
புகலரசர்சன்மானம் வஸ்திராபரணம்
சிமேவுசிவிகைவருஞ் சுகபோகஞ்சேரும்
தேகசவுக்கியமுண்டா மூன்றுபத்திலேதான்
மீமேவுஞ்சசிபூர்ண மாகியிருந்தாலும்
விளங்குசோக்ஷேத்திரத்துறினு மிகும்பலனைக்கேளே. 4

பலனுதவுங்காலிகன்று உடனிவுளிசிவிகை
பண்பானராச்சியமும் லாபமதிசுகமாம்
நலனுதவும்புத்திரலா பம்வஸ்திரலாபம்
நல்கும்விதுசட்டாட்ட வியத்திலிருந்தாலுங்
கலகமிகுபாவியுடன் கூடியிருந்தாலுங்
கனதனதானியலாபம் பூஷணலாபங்கள்
சொலவரியபாவர்கூ டாமலவன்பார்வை
தோன்றுடிலுந்தன தான்ய நாசமுறுந்தானே. 5

தானனபந்துசன விரோதமுமுண்டாகுஞ்
சாதகன்றன்காலினிலே விலங்குவந்துசேரும்
வானுருமதியிரண்டே ழுக்குடையோனுகில்
வந்துவிடுமவமிருத்து பயமதற்குத்தானே
மானுருமீசனுக்கு அபிஷேகஞ்செய்ய
வருந்துயர்போயதிகசுக முண்டாகுமென்றார்
தேனெடுபால்கருப்பஞ் சாற்றினையுஞ்சேர்த்துத்
தெளிந்தெடுத்தவமுதமெனச் செப்புமொழித்திருவே. 6

ஆக விருத்தம்-381.

---

## கேதுதிசை செவ்வாய் புத்தி

செப்பியதோர்கேதுவினிற் குசன்புத்தியதுதான்
சேர்ந்துவரும்கால்மாத மிருபத்தேழ்நாளாம்

ஒப்பிலாக்குசன்கேதுக் கந்தர்க்கதனுக
வுற்றாலும்கேந்திரகோ ணத்தையடைந்தாலும்
இப்புவியிற்தன தான்ய மிகநாசமாகு
மெதிர்த்துவருஞ்சமர்தனிலே யபஜெயம்வந்தெய்துந்
தப்பரியபந்துசன விரோதமும் வந்தெய்துஞ்
சதருபயஞ்சுரபீடை யுஷ்ணபயித்தியமே. 1

சயபீடையுடன் மனைபோஞ் சுபாங்கிசமதாயுந்
தனிச்சுபர்கள்சேர்ந்தாலும் முச்சமொச்சேத்திரத்தில்
நயமோடங்கிருந்தாலு மற்பசவுக்கியமாம்
நடுமததியசவுக்கிய நலகிடுமேசடையிற்
பயமோடுபரதேச சஞ்சாரமுண்டாம்
பார்த்திபராற்சோரரா லக்கினியாற்பயமாங்
கயலாரும்விழிமடவா யதிசாறபோகங்
காச்சலுமுண்டாமெனமே கருதினர்சோதிடரே. 2

திடமுடையசட்டாட்ட வியத்திலிருந்தாலுந்
திரிகோணகேந்திரத்திற் பாவியுடனுறினுங்
கடன்மிகுக்குமதிகஷ்டந் தனதான்யநாசங்
களத்திரபுத்திரநாசஞ் சுபனுடனேகூடி
லடைவுண்டயதனலாபம் புவிலாபமுண்டா
மாதிபுத்திசவுக்யமத்தி யாங்கடையிற்கிலேசம்
தடமுலையாய்மூன்றுபத்து பதினொன்றிற்
றனிருந்தாலதினபலனைச் சாற்றிடுவன்கேளே. 3

சாற்றறியபுவிலாபம் விபசாயலாபந்
தனலாபமாதினியிர் சவுக்கியமுண்டாகு
மாற்றறியவந்தியததி லகாலபோசனமும்
வருஞ்சிரநோய்புத்ரமித்ர களத்ராதிநாசம்
போற்றுகடைசியில்மரணம் வாக்கெழுக்கிவனே
புகழ்நாதனுக்காற் பொருகளத்ரபீடை
தோற்றுமலமிருத்துபய முண்டாகுமதற்குச்
சூரியனர்நமஸ்காரஞ் செய்திடவேசுகமே. 4

ஆக விருத்தம்-385.

---

## கேதுதிசை இராகுபுத்தி

தானமுறுங்கேதுதிசை தனில்ராகுபுத்தி
சார்ந்ததிங்கள்பன்னிரண்டு நாள்பதினெட்டாகும்
ஆனதொருகேதுவுக்கு ராகுவுங்கேந்திரனு
யமர்ந்திருந்தாற்கலகமுறு மனவியாதியுண்டாஞ்

சேனைமன்னர்விரோதமிமாடு செசமிவுளிதான்யஞ்
சேர்ந்தபொருள்மிகநாசஞ் செஞ்சுபர்கள்கூடில்
ஈனமில்லாச்சுபர்பார்க்கிற் சுபாங்கிசமேரிடினு
மிதன்பலனைவகைவகையா யெடுத்துரைக்கக்கேளே. 1

எடுத்துரைக்கிற்றனலாப மிலேச்சமன்னராலே
இசையுமகாசுபங்களுண்டா மிவன்கிராமந்தன்னிற்
கொடுக்குமேதனலாப மவன்புத்தியாதி
கூறுசுபமத்தியத்திற் கடைசியிலுங்கிலேசம்
அடுத்ததொருசட்டாட்ட வியந்தனிலேபாவி
யானவர்கள்கூடினு மவர்பார்த்திட்டாலும்
வடுப்பொருந்துங்கண்ணுய்கேள் சனநாசம்ரோகம்
வருஞ்சிரநோய்குளிர்காய்ச்சல் மகாவிடமுண்டாமே. 2

விடமுண்டாம்வியாதியுண்டாம் காரணமாய்ச்சண்டை
மேகமுடன்சரீரமதி லதிபீடையுண்டாந்
திடமுண்டாங்கோண கேந்திரலாபந்தனிற்
சேர்ந்திருக்கில்மூன்றுறிற் போந்தடைந்தபாம்பின்
உடனன்றும்பிலவான்கள் கூடியிருந்தாக்கா
லுறுமறப்பசவுக்கியமு மற்பலாபமுமாந்
தொடர்பந்துசன்மானத்தா லற்பபலமாந்
தோகைமயிற்சாயலுறுந் தொடிமலர்க்கைமாதே. 3

வேறு

தேசுறும்வாக்கிலேனிற் சேர்ந்தரவிருக்குமாகில்
ஆசைசோதரர்களுசு மதிற்பொருள்விரையமுண்டாம்
காசினியதனிற்பிற்கூர் தனகமுந்தானியாதி
யாசுகமுண்டாமென்று வழுத்திடுமடநல்லாளே. 4

ஆக விருத்தம்-389.

---

## கேதுதிசை குருபுத்தி

வேறு

மடக்கொடியேகேதுவினிற் றேவகுருபுத்தி
வருமாதம்பதினென்று நாளாறதாகுந்
திடப்படவேகேதுவுக்கு வியாழனந்தர்க்கதனைச்
சென்றுறும்பாக்கிய லக்கினத்தானத்தோர்கள்
இடத்திலன்போய்க்கூடினும் தனதான்யலாப
மிராச்சியலாபமுமதிக சந்தோஷமுண்டாம்
நத்திடுமேவிவாகமுடன் புத்திரருற்பத்தி
நடாற்காவிலாபமிகும் நாகரிகமின்னே. 1

நாகரிகமுறுமனையில் லட்சுமிவந்திருப்பாள்
நல்லபுண்யநதிதீர்த்த யாத்திரைசெய்திடுவன்
யோகமிகுமிட்டதெய்வக் கிருபையினலச்ச
முறினுமுபசெயங்கேந்திர கோணலாபத்தை
வாகுபெறுமுச்சசொக்ஷேத் திரத்தையடைந்தாலும்
வருபரசசன் மானஞ் சிவிகைமிகுலாபம்
பாகுபெறுமொழியாய்வஸ் த்ராபரணமுடனே
பாவர்களத்திரலாப மிகுசுகமுண்டாமே. 2

உண்டாகும்கேந்திர கோணத்தையடைந்தாலு
முற்றதொருமூன் றுபதி னென்றிலிருந்தாலுந்
தண்டாதசுபமரசநேக வஸ்த்ராபரணந்
தண்டிகையும்புரவியுடன் நல்லபோசனமாங்
கொண்டாடுஞ்சட்டாட்ட வியத்திலுறும்ராகு
குறித்தசுபனுடன் கூடிற் றனதான்யலாபஞ்
செண்டாருங்காமாதே தரளபணிமாலை
சேர்ந்துமிகலாபமுண்டாஞ் சிறந்தசாதகர்க்கே. 3

சாதகமாயிவன்புத்தி யாதியிலேகஷ்டந்
தரும்பாவியுடன் கூடிற் பாவிபார்த்தாலும்
நீதமிகும்புத்திரரு மித்திரருங்குரோத
நீரிழிவும்பந்துசன குரோதமுமுண்டாகும்
பேதகமாய்நேத்திரத்தில் வியாதியினால்நாசம்
பின்பரசால்சோரரா லக்கினியாற்பயமாஞ்
சூதளவாய்ச்சிமிளாகி இளநீராய்மலையாய்ச்
சொல்லுதற்குமுவமையில்லாத் துணைமுலைப்பைந்தொடியே.4

வேறு

துணையில்லாவாக்கேழுக்குச் சொலுகாதனிவனேயானல்
இணையிலாத்தேகபீடை இதற்குமேபரிகாரந்தான்
பணவரவணியாய்ப்பூண்ட பரமனுர்பூசைசெய்ய
குணமுடன்றேசநீங்கி கூடிடுமெதிகவாழ்வே. 5

ஆக விருத்தம்-394.

---

## கேதுதிசை சனிபுத்தி

வேறு

கூடிடுமேகேதுதிசை தனிற்காரிபுத்தி
கூறுதிங்கள்பதின்மூன்று நாளுமொன்பதாகும்

நீடுமூடற்கேதுவுக்குக் காரியந்தாக்கதனாய்
நின்றாக்காற்றேகமதில் மிகுபீடைதானும்
நாடரசர்கலகமுமுந் தனநாசமாகும்
நல்லமனைபாழாகு மனஸ்தாபமுண்டா
மூடல்மிகும்வழிநடையி லரசாற்களரா
லுறுந்தியாற்பயமாகும் விவாதமிகுமுடனே. 1

உடனாமூலத்ரி கோணத்திலேனு
முயர்ந்தசொக்ஷேத்திரத்தேனு முச்சத்திலேனுந்
திடனாசுபனுடனே கூடியிருந்தாலுஞ்
செழுஞ்சுபர்கள்பார்த்தாலுந் தன்வாரந்தனிலே
கிடையாதராசதெரிசன முண்டாஞ்சிவிகை
கேடில்லாவாபரண லாபமிகவுண்டாம்
படாகந்தனைப்பழித்துவர சிலையைப்பொருதும்
பஞ்சபாணன்மனைபோற் பகருமல்குற்றிருவே. 2

பகர்ந்ததொருசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
பதிந்தவுச்சத்திருந்தாலும் பாவிகூடிடினு
மிகுந்ததொருபீடைவரு மனவியாதியுண்டாம்
வெகுமனஸ்தாபங்காணுங் காரியம்விக்கினமாந்
தகுந்தபடிபாவசிந்தை யுண்டாகுங்கிரகந்
தான்போகுமிருகாலிற் பருவிலங்குசேருஞ்
சகந்தருநற்சுபன்கூடி லற்பசவுக்கியமுந்
சூக்ஷமதாய்த்தனதான்ய லாபமுமுண்டாமே. 3

தனதானகேந்திரகோணத்தை யடைந்தாலுந்
தனிலாபஞ்சகோதரதா னத்தையடைந்தாலுங்
கனமானபருவிலங்கு காலிலுறும்பின்னெக்
காலமும்பாவத்தில்மனங் கசிந்துருகிப்பொருந்தும்
மிகசனங்கள்பகையாகும் விலங்கினாற்பயமா
மிவன்புத்தியாதியிலே சுகமாமத்தியத்தில்
மனதினிலேயதிககஷ்ட மந்தியத்திற்புத்ர
வர்த்தனையுங்களத்திரத்தின் வாழ்வுமிகுமாதே. 4

மாதேசட்டாட்டவியத் திற்பாவியுடனே
வதிந்தாக்கால்மனவருத்தத்தால் மரணமாகுந்
தீதேசேய்பரதேச சஞ்சாரமுண்டாந்
திரண்டகுன்மரோகம்வருஞ் செகாசர்பயமாஞ்
சூதேசெய்கள்ளரா லக்கினியாற்பயமாஞ்
சொலுமிரண்டேழுக்குடையோ னாகிலவமிருத்து

கோதேதுமில்லாத வரிசகஸ்ரநாமங்
கூறுசெபஞ்செய்துவந்தாற் கொடுத்திடுநற்சுகமே. 5

ஆக விருத்தம்-196.

---

## கேதுதிசை புதன்புத்தி

நற்கேதுதிசைதனிலே புதனபகாரந்தான்
நலஞ்சேருந்திங்கள்பதி னென்றிருபத்தேழ்நாள்
இற்கேதுக்கேபுதனந் தர்க்கணையிடினு
மிசைகேந்திரகோணவுச்ச லாபமேறிடினுஞ்
சொற்சேதமில்லாத ராச்சியலாபங்கள்
சுகமாசர்கிருபையினாற் கிகைதனலாபம்
வற்காவியுடனிரையாம் வெகுலாபமாகும்
வளர்புத்ரசவுக்கியமா மாதுசிரோமணியே. 1

மணியேகேள்வாக்காதி பதியுடனே கூடி
மத்தகெசந்துரகதலாபங் கதைகள்கேள்வி
தனியாததருமசிந்தை யதிகசுகமுண்டாந்
தான்வாகனாதிபதி யுடன்கூடினக்கால்
அணியாருங்கிரகமுடன் க்ஷேத்திரமும்லாப
மாகுமிஷ்டபிரர்சன்மா னங்கள்மிகவுண்டாம்
பணியாரும்படத்தினையு மதத்தினையும்பழித்துப்
பண்புபெறதேபெழில்சேர் கடிதடப்பைந்திருவே. 2

கடிதானசட்டாட்ட வியந்தனிற்செவ்வாய்நற்
காரியுடன்கூடிடினு மவர்பார்த்திட்டாலுங்
கொடிதானராசாங்லக விரோதமிகவுண்டாங்
கூபமதில்விழுந்தெழுவன் குடியிருப்பம்போகும்
படிமீதுதென்றிசையிற் பிரயாணந்தன்னிற்
பார்த்திபர்கள்கலகமிகுஞ் சமரினிலேவிரணம்
முடியாதுஆதாரதாயந் தனக்குமிகுஞ்சிலவா
முழுமதிபோலிலகுமுக மோகனச்செந்திருவே. 3

செந்திருவேசுபக்கிரகத் துடன்கூடினலுஞ்
செய்யசுபன்பார்த்தாலுந் தனதான்யலாபம்
புத்திபுத்தியாதியிலே சோபனமுஞ்சுகமாம்
புகலரியகோணகேந் திரலாபத்திருந்தால்
வந்திடும்ராசப்ரீதி கனசிவிகையுண்டாம்
வாழ்வுமிகுதேகவா ரோக்யமிகக்கூடும்

பந்தினைச்செப்பினையமுத கலசமதைப்பொருப்பைப்
    பழித்தினைஞாசையுறும் பயோதரமோகினியே. 4

பயமுறுஞ்சட்டாட்ட வியமதிற்பாவியுடனே
    பன்புபெறவிருந்தாலு பாவிபார்த்திடினும்
நயமுறவேவரீசனு யிருந்தாலும்புலவன்
    நண்ணுபுத்தியாதி யிற்சத்துருபயங்கள்பீடை
பயமிகுந்தசுரஞ்சிரநோய் குளிர்தானுண்டாகு
    மறிவனிரண்டேழினுக்கு மதிபதியாயிருந்தாற்
செயமிலவமிருத்திதற்குப் பரிகாரம்நவக்கோள்
    சென்றுதினஞ்சுற்றிவரத் தீருமிதுசெய்யே. 5

ஆக விருத்தம்-404.

---

## சுக்கிர திசை சுக்கிரபுத்தி

செய்யதோர்கவிதிசையில் வருஷமிருபதுக்குஞ்
    சிறந்தபலன்கவியுச் சந்தனனிலிருந்தாலும்
ஐயமில்லாக்கேந்திரத்தை யடைந்தாலுமனவி
    அபிமானமுண்டாகும் வாகனங்கள்லாபம்
வையகத்திலதிகபூ ஷணலாபமாகும்
    வளர்பூமிலாபமுடன் வாத்தியலாபங்கள்
மையிலகும்விழியாய்கேளி வன்மனையிற்றிருவும்
    வாழ்ந்திருக்கும்நல்லபோ சனங்களுமுந்தானே. 1

நல்லதிரிகோணத்திற் புகரிருந்தானென்னில்
    ராச்சியலாபங்கள்மிகும் கலியாணம்நடக்கும்
வல்லதொருபுத்திரர்க ளுண்டாங்கைட்டு
    வருந்தியராச்சியலாபம் வந்துடனேகூடுஞ்
சொல்லரியசட்டாட்ட. வியந்தனிலேபுகர்தான்
    சொலுநீசனுயிடினுஞ் சத்துருவீடுறினுஞ்
சில்லறைசேர்புத்ரகளத் திரநாசமாகுஞ்
    சிவிகைதனதான்யபசு மனைநாசமாமே. 2

நாசமில்லாப்பாக்கியகர் மத்துடையோனெனினும்
    லக்கினநாலாமிடத்தை யடைந்திருந்தானெனினும்
பேசுமந்தத்திசைதனிலே யதிகசவுக்கியமாம்
    பெரிதானகிராமமுடன் பூமிமிகலாபம்
பூசுரர்களிணக்கமுடனு லயங்கோபுரங்கள்
    பொருந்துதடாகப்பிரதிட்டை புண்யதன்மஞ்செய்வன்

அரசர்மகிழ்தளகர்த்தர் சன்மனமுடனே
நண்ணுசவுக்கிரமாசர் சன்மானமுறுமே
அரசராற்கீர்த்தியுண்டாங் களத்ரபுத்ரலாப
மதுகூடுமிரண்டேழுக் கிவனாதனாகில்
உரைசெவ்வாயிவன்றனக்குப் பீடையுண்டாமென்றே
யுற்றபரிகாரமது வெள்ளிநோம்பிருக்கத்
தரையிலிலேயதிகசுகந் தான்மிகவுண்டாகுந்
*தனதபகாரந்தனக்கும் பலனிதுவெனவுரைப்பாய்
வரையைநேருந்தனத்தா லாடவர்களுடைய
மார்பிறுகத்தழுவுமிள மடமயில்மின்னாளே. 4

ஆக விருத்தம்-408.

---

## சுக்கிரதிசை சூரியபுத்தி

மயிலேகேள்புகர்திசையில் ரவியபகாரந்தான்
மாதமொருபன்னிரண்டில் வரும்பலனைக்கேளாய்
வெயிலோன்றன்புகருக்கந் தர்க்கதனாயிருக்கில்
வெகுநாசம்நிட்டூரந் தாயாதிகலகம்
அயலார்கள்விவகாரந் தன்னிலவமான
மாகுமுச்சசொக்ஷேத்ர மித்திரக்ஷேத்திரத்தில்
இயல்பாகவிருந்தாலுஞ் சுபன்கூடினாலும்
இதன்பலனைவடநூலின் படியியம்புவேனே. 1

இயம்புகின்றதேகசவுக் கியம்ராச்சியலாப
மிவன்மனையிச்சோபனமுஞ் சுபமுமிகவுண்டாம்
வயம்புனையும்ராசாபி மானத்தாற்கிராமம்
வரும்பூமிலாபமிகும் மனையிலுறுந்திருவும்
நயம்பெருகுந்திரிகோண கேந்திரத்திலிருந்தால்
நாடுமற்பாக்கியமும் பிதுர்கிலேசமாகுஞ்
செயம்பொருந்துந்தாயாதி தனநாசமாகுஞ்
சிற்றிடைதாங்காதெழுந்து சிறந்ததனமானே. 2

மானேகேளிவன்புத்தி யாதிசத்ருபயமாம்
மத்திசவுக்கியங்கடையில் ராசசன்மானமுமாத்
தானேசட்டாட்டவியந் தனில்நீசனாகச்
சார்பாவியுடன்கூடி யாதிதனிருந்தால்

---

சுக்கிரன் சுயபுத்திக்கு மிஃதேபலனென்றறிக.

ஆனாலும்ராசர்பயர் தொடுத்தகர்மம்நாசம்
ஆதிபீடையிட்டசன கலகமவமானந்
தேனாருமொழியாய்கேள் சுரஞ்சிரநோயுண்டாந்
திகழ்சனனால்முன் சொன்னபலன்செப்பே. 3

சொன்னதொருகோண கேந்திரலாபந்தனிற்
சூரனிருந்தாலுமவ னுடன்கூடினானெனிலும்
வினைமுறும்பாவியுடன் பிலவரன்கூடிடினும்
மிருத்தனநாசமிட்ட சனக்கலகத்துடனே
அன்னமதுமருந்தாகும் பாவசிந்தைசேரு
மாதிபுத்திநல்லபலன் மத்தியத்திற்கஷ்டம்
நன்னலஞ்சேர்கடைசிதனி லதிசுகமாமென்று
நவின்றனர்கள்சோதிடநூல் நாளுமுணர்ந்தோரே. 4

உரையுறுஞ்சட்டாட்ட வியந்தனிலேபாவி
யுடன்கூடில்ராசசோ ரக்கினியாற்பயமாஞ்
சாரமிகுந்தேகமதிற் பீடையுமுண்டாகுந்
தலைவலியுஞ்சுரமும்வரு மனைதானும்போகும்
பாரதனிலிரண்டேழுக் கிவனாதனாகிற்
பகருமவமிருத்துபயம் பரிகாரமதற்குச்
சூரியனார்நமஸ்காரஞ் செய்துவந்தாலதிக
சுகமாகுமென்றுரைத் தார்சோதிடர்கள்தாமே. 5

ஆக விருத்தம்-413.

---

## சுக்கிரதிசை சந்திரபுத்தி

சோதியுறுபுகர்திசையிற் சோமனபகாரந்
துலங்கியதோர்திங்களிரு பதினில்வரும்பலன்கேள்
நீதியுறுஞ்சுக்கிரற்கு மதியந்தர்க்கதனாய்
நின்றாலும்லக்கினாதி பதியுடன்சேர்ந்தாலு
ஓதியிடுஞ்சுபனுடனே கூடியிருந்தாலு
முயர்ந்தகலைபூரணமாய் மதியமிருந்தாலு
ஆதரவாய்க்கோணகேந் திரலாபந்தனிலே
யடைந்தாலுமதின்பலனை யறைகுவன்கேளனமே. 1

அன்னமும்பாலுடன்புசிப்பன் ராச்சியமும்லாப
மதிகசுகந்தளர்த்த ராசரபிமானஞ்
சொன்னபலகிராமமுடன் பூமிமிகலாபந்
தூயநதிதீர்த்தமிவன் சென்றாடிவருவன்

பன்னுதமிழாராய்தல் புராணமிகக்கேள்வி
பகர்ந்தபிரசங்கத்தில் வாகனலாபமுமாம்
பின்னனிகர்ச்சின்னவிடை மெலிந்தொசிந்துவாட
விம்மியெழுந்துயர்ந்ததன மெல்லியருக்கரசே. 2

கறைபொருந்துஞ்சசிநீச னுகியிருந்தாலுங்
கருதுமஸ்தமனக்கிரகந் தன்னையடைந்தாலுங்
குறைவிருந்தசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
குறையாததனநாசம் பரதேசகமனம்
விறைவாகுமதிகபய மனநோயதாகு
மிராசமந்திரியா லதிவிரோதமுமாம்
நறையாரும்பூங்குழலாய் வடதிசையிற்பயணம்
நலமித்திரநாசமுட னகாலமிர்த்துபயமே. 3

மேதினியிற்கேந்திர திரி கோணபலாபலத்தில்
வீற்றிருந்தால்ராச சன்மானந்தேசங்கிராமம்
நீதிமிகுபூமிவெகுலாபம துண்டாகும்
நிகழ்த்திலதிகீர்த்தியொடு சிவிகைவந்துசேரும்
ஓதரியவஸ்திரா பரணமிகவுண்டா
முறியதடாகங்கிரக மதுபுதிதாய்ச்செய்வ
னுதிபுத்தியினிற்சுக மதியமத்தியத்திற்கஷ்ட
மந்தியத்திலதிகசுக மாகுமெனக்கருதே. 4

ஆக விருத்தம்-417.

---

## சுக்கிர திசை செவ்வாய்புத்தி

கருமேகம்பொருமழைக் கோள் திசைதனிலேதியங்
காரகன்றன்புத்தி பதினுன்மாதமாகுந்
திருமேவுசுக்கிரற்கு குசனந்தர்க்கதனுய்ச்
சேர்ந்தாலுந்திரிகோண கேந்திரத்துற்றுலுங்
குருநீசவீட்டிலிவ னுச்சம்பெற்றுலுங்
கோதில்லாச்சொக்ஷேத்திர லாபமடைந்தாலும்
வரும்பிலவானுடனே தான் கூடியிருந்தாலும்
வலியலக்கினதிபன் கூ டிடினுமின்னங்கேளே. 1

கூடியதோர்கர்மாதி பதிபாக்யத்துடையோன்
கூடிடினுஞ்சுபக்கிரகங் கூடிடினுஞ்சுபரால்
நாடியேநோக்குறினு மரசரபிமானம்
லட்சுமிகடாக்ஷமுண்டாம் நட்டமுற்றபூமி

தேடியேயிவனிடத்தில் வலியவந்துசேருஞ்
செழுமனையிலதிகசுகம் புத்திரவுற்பத்தி
ஆடையாபரணமுண்டாம் நினைத்ததுகைகூடு
மவன் வார்ந்தனில்ராச பேட்டியுமுண்டாமே. 2

உண்டாகுஞ்சட்டாட்ட வியத்திலிவனிருந்தா
லுயரரசர்விரோதமிகுஞ் சமரிலபஜெயமாந்
தண்டாதகிரகம்போங் குளிர்காச்சலுடனே
தலைவலியுமனநோயி த்ரவ திகமாகும்
கொண்டாடுங்கேந்திரகோ ணத்தையடைந்தாலுங்
குறித்ததொருமூன் றினிற்பன் னென்றிலிருந்தாலும்
பண்டாலுற்றிடுமொழியாய் பச்சிளநீர தனைப்
பழித்தபயோதரத்திருவே பலாபலனைக்கேளே. 3

பலன்பொருந்துதருமசிந்தை யுடன திகக்கீர்த்தி
பதிவானமனையதனிற் சேற்பனங்கள்நடக்கும்
கலம்பொருந்துந்தன தான்யம் நாற்காலாபம்
நன்மனையிற்றிருசேரும் விபசாயம்பலிதம்
நிலம்பொருந்துமிரண்டேழுக் கிவனுதனுகில்
நீங்காதபீடைவருங் கள்ளர்பயமுண்டாம்
பெலம்பொருந்தும்பரிகார முருகனுக்குப்பூசை
பேசியவார்செய்தாலோ பீடைவிடுஞ்சுகமே. 4

ஆக விருத்தம்-421.

---

## சுக்கிரதிசை இராகுபுத்தி

சுகமீறுங்கவிதிசையில் ராகுபுத்தியதுதான்
சொல்லுமுப்பத்தாறுதிங்கள் சுக்கிரர்க்குராகு
மிகவேயந்தர்க்கதனுய் மேவியிருந்தாலும்
வியன்கேந்திரலாபதிரி கோணத்துற்றாலுஞ்
செகமீதிலுச்சத்தானத்தி லிருந்தாலும்
செழுஞ்சுபர்கள்யோக காரகர்கூடினலும்
தொகையானமூன்றுபதி னென்றுபத்தாறினிலே
சுடர்பகைவனுற்றிருக்கிற் சொலும்பலன்கேள்மாதே. 1

சொல்லுமவன்புத்தியினி லிவன்சத்துருநாசஞ்
சுகமதிகச்சந்தோஷ மரசர்சன்மானமுமாம்
வல்லபுத்தியாதியினிற் சுகஞ்சுரநோயுடனே
மனஸ்தாபமுண்டாகு மத்தியமந்தியத்தில்

நல்லதொருராசசன்மானங்களுமுண்டாம்
  நாடியசுக்கிலபக்ஷ சசியாகவிருந்தாற்
செல்வமிகுஞ்சிவிகைவரும் நிருதிதிசையதனிற்
  சென்றரசர்பேட்டிதனில் நினைத்ததெல்லாந்தருமே. 2

மேலானோர்விசுவாசம் புண்ணியதீர்த்தங்கள்
  மிருத்ததலைப்பாவியுடன் கூடினும்பார்த்தாலும்
மாலானசட்டாட்ட வியத்திலிருந்தாலும்
  வருமசுபம்பிதுர்மாதுர் சனவியாதியுடனே
நாலாய்ந்தபெரியோர்க ளிட்டசனவிரோதம்
  நுவலிரண்டேழுக்காவு நாதனுயிருந்தால்
பாலாருமொழிமடவாய் சாதகர்க்குப்பீடை
  பற்றிடினும்பரனருளால் பலக்காதுசுகமே. 3

ஆக விருத்தம்-424.

---

## சுக்கிரதிசை குருபுத்தி

சார்ந்தமுறுமசுரகுரு திசையதனிலமரர்
  தன்குருவின்புத்திதிங்கள் முப்பதுடனிரண்டாம்
பாந்தமுறுஞ்சுக்கிரற்கு வியாழனந்தர்க்கதனுப்
  பதிந்திடினுமுச்சசொசேஷத் திரகேந்திரத்துறினும்
சேர்ந்தசுபராசியினிலிருந் தாலும்பாக்கியந்
  திகழ்தானத்துடையோனுச் சிறந்திருந்தாலுந்தான்
யேந்துமிளமுலைமாதேபொன்னி ருந்தாலுந்தா
  னிதின்பலனைவகைவகையா யியம்பிடக்கேட்பாயே. 1

இயம்புவன்கேளதிகசுக முன்போனசிமை
  யிவர்க்குவருங்கிராமமதிற் றனியலாபமுமாம்
வசம்புனையுமாசர்சன்மானமுந் தெற்குத்திசையில்
  வரும்பிரயாணத்தாசர் பேட்டியுமுண்டாகும்
கயம்புரவிசிவிகைமிகும் கேந்திரகோணத்திற்
  கனகனிருந்தாற்புத்ர களத்ராதிசுகமாஞ்
செயம்பொருந்துமதிகசுகசந்தோஷமுண்டா
  மேசெலனீண்டேபாந் தரிசெய்பவிழிமாதே. 2

செய்ததொருசட்டாட்ட வியத்திலவனிருந்தாற்
  சேகராசர்சோரரா லக்கினியாற்பயமாம்
பையவருஞ்சண்டையிலே மனநோயியுண்டாகும்
  பதிவானமனைபோகும் பார்த்திபர்கள்விரோதந்

துய்யவிரண்டேழினுக்கு மிவனுதனுகில்
தொலையாதபீடையுண்டா மனுதிரவென்றால்
வையகத்திலேழைகளுக் கனதானஞ்செய்ய
வருமதிகச்சுகமெனவே வழுத்தினர்கற்றோரே.

ஆக விருத்தம்-427.

---

## சுக்கிரதிசை சனிபுத்தி

வழுத்தியசுக்கிரதிசையிற் சனியபகாரந்தான்
வருமாதமுப்பதுட னெட்டதனிற்பலங்கே
ளழுத்தமுடன்சுக்கிரற்குச் சனியந்தர்க்கதனு
யானுக்கால்ராசசன்மானந் தீர்த்தத்தானந்
தெளித்ததர்ம்மதானமிக வினிதாகச்செய்வன்
செப்பெனவேபுடைத்தெழுந்து திரண்டுவிளநீரைப்
பழித்தமுககலசமென விளைஞோர்கள்மார்பிற்
பாயுமுலைக்கோடிசந்த பதுமமலர்மாதே. 1

சேறினன்சேயுச்சகொடேக்ஷத் திரகோணகேந்திரந்
திகழ்மூலத்திரிகோண லாபத்தானத்தி
லேறியிருந்தால்ராச சன்மானமவரா
விசைவிருதுபெற்றிடுவ னிராச்சியமும்லாபம்
பாரதனிற்களத்ரபுத்ர சவுக்கியமுமுண்டாம்
பற்றலர்கள்குலநாச மதிகீர்த்தியாகும்
வாரிலங்குங்கும்பமுலைப் பாராமிகுத்தொசிந்து
வாடியபூங்கொடிபோலு மருங்குவிளந்திருவே. 2

கொடிதானசட்டாட்ட வியந்தனிலேமுடவன்
குலவியிருந்தாற்புத்தி யாதியிலேசவுக்யம்
படிமீதிற்மத்தியிலந் தியந்தனிலுங்கிலேசம்
பதிவானமூன்றுபதினொன் றையலடந்தாலும்
நெடிதானபாக்கியம்பந் ததிபதியானாலும்
நீங்கரியவடதிசையிற் பிரயாணமதிலே
முடிராசர்பேட்டிதளகர்த் தமுமுண்டாகும்
முந்திவரும்ராச்சியலா பங்கள்மிகத்தானே. 3

ஆக விருத்தம்-430.

---

## சுக்கிரதிசை புதன்புத்தி

தானவர்க்கோன்புகர்திசையிற் புதனபகாரந்தான்
சாற்றிடிலோமுப்பதுட னுல்மாதமாகு

மானபுகர் தனக்கிவனந் தர்க்கதனுனு
மதிகவுச்சசொகேஷத்திர கேந்திரத்துற்றாலும்
ஈனமில்லா திரிகோண லாபத்துற்றானு
மிசைராசதன் மானம் புத்திரரும்லாபங்
கூனலுறுஞ்சிவிகையுட னுற்காலிலாபங்
கூறுபுராணங்கேள்வி சோபனமுண்டாமே. 1

மேதையவன்கேந்திரலா பத்திரிகோணத்தில்
மிருபிலவானுடன் கூடி வீற்றிருப்பானுகில்
நீதிமன்னர்பேட்டியுட னதிசுகமாகும்
நிகழ்த்திலிவன்வாரத்தி லிராசபேட்டியிமாஞ்
சாதகர்க்குநல்லநல்லபோ சனமுமுண்டாகுஞ்
சட்டாட்டவியத்தினிற்றற் பலமாகப்பாவர்
தீதுறவேகூடியிடி லவனபகாரத்திற்
செய்யுபலாவபலமதை செப்பவினிக்கேளே. 2

செப்பரியசாதகர்க்கும்பருவி லங்குண்டாகுஞ்
சிந்தைமிகக்கலங்கிவிடு மகாலபோசனமாக்
தப்பிதமில்லாபுத்தி முற்யாதிசவுக்யக்
தான்பிற்பாதியிற்கஷ்டங் தருமிரண்டேழுக்கே
இப்புதன்றான திபதியாயி ருந்தாக்காற்பிடை
யெய்துமதன்பரிகார மேழைகளுக்கன்னம்
செப்பியவாரீய்ந்தாலெப் பாவதுமகன்று
தேகதிடமதிகாரஞ் செல்வமுடன்சுகமே. 3

ஆக விருத்தம்-433.

---

## சுக்ரதிசை கேதுபுத்தி

வருமேசுக்கிர திசையிற் கேதுபகாரந்தான்
வருடமொன்றுமா தமிரண்ட தல் பலனேவழுத்திற்
சுரர்பகையாய்க்குருவுக்குக் கேதந்தர்க்கதனுய்த்
தோன்றிடினுஞ்சுபாங்கிசத் துற்றாலுமதிகசுகமாம்
வரனதியேமுதலான தீர்த்தயாத்திரையாம்
வளர்புத்திபாதியிலே சகலசவுக்கியமும்
பாவுமிவன்புத்ரமித்ர ராகனிரோதமுமாம்
பகர்கடையில்வரும்பலனேப் பகருவன்பெண்ணமுதே. 1

தேவபூசனேயுடனே யுத்ராதிபயணஞ்
சேருமதிற்சொகாரசர் பேட்டியுமுண்டாகு
மேவுகளத்திரலாபங் கேந்திரகோணத்தில்
மிகுலாபத்தானத்தில் வீற்றிருக்கிலேனும்

மாவலுவாய்ச்சுபனுடனே கூடியிருந்தாலும்
வருஞ்சுபர்கள்பார்த்தாலுமாற் றலைச்செயிப்பன்
பூவுலகிலாசாற்றன தாலயலாபம்
மொருந்துமெனச்சோதிடர்கள் புகன்றதுதப்பாதே

தப்பிதமாஞ்சட்டாட்டவியக் தனிற்கேதவனுஞ்
சார்ந்திடிலுஞ்சுபர்களாற் றுங்பார்க்கப்படினு
மிப்புவியிலாசாற் சோராரற்றீயால்
யிசைபயம்புத்திரநாச மதிகபயஞ்சிரநோல்
ஒப்பில்மனச்சஞ்சலமாங் களத்ரபுத்ரவிரோதம்
உடன்பந்துசனக்கலகை முண்டாகுமென்றே
மைப்பழகுங்குழல்மடவாய் பராசரமாமுனிவன்
வடமொழியில்மொழிந்தபடி வழுத்தினர்கற்றோரே.

வடமொழிப்படியேகேது வாக்கேழுக்கதிபனுற்
சடமதிற்பிடையுண்டாந் தவிர்ந்திடப்பரிகாரந்தான்
றிடமுடனன்ன தானஞ் செய்திடிற்சகலயோகம்
அடைவனடைவாரென்று அரைந்தனர்பராசர்தானே.

ஆக திசை-9-க்கு-புத்தி-81.

விருத்தம்-437.

பாராசாரியம்

முற்றிற்று.

---

## திசாபுத்தி அட்டவணை

மனிதர்களின் காலநிலை சுகதுக்கத்தை கவனிக்கும்

பெரிய நூதன

# சோதிடசில்லரைக்கோவை

மூலமும் — உரையும்

[இதன் விலை ரூபா 1—8—0]

அன்பர்காள்! அநேக ஏட்டுப் பிரதிகளை ஆராய்ந்து அவற்றில் சிறந்த முக்கியமான 25-விதமாகிய ஜோதிட புஸ்தகங்களை ஆராய்ந்து அவைகளே சரியென தீர்மானித்து முன்னோரெழுதி ஏட்டுப் பிரதியாயிருந்ததை தற்கால மனிதவகுப்பினரில் அநேகருக்குத் தெரியாமலிருந்தமையால் அவைகட்குச் சரியாக உரையெழுதி காலநிர்ணயத்தின் படியே சக்கரங்களமைத்து கிரகங்களிருக்கும் கால பலன் லக்ஷணத்தையும் விபரமா யெழுதி சுத்தப்பதிப்பாய் அச்சிட்டு விற்பனை செய்கின்றோம்.

# சாதகாலங்காரம்

மூலமும் - விரிவுரையும்

[இதன் விலை ரூபா 2.]

பதினெண் மகரிஷிகளால் திரிகால வர்த்தமானங்களையும் உணரும்படி சொல்லியருளிய சோதிட சாஸ்திரத்தினின்றும் சார்வபௌமராகிய கீரனூர் நடராஜரால் அருளிச் செய்யப்பட்ட சாதகாலங்காரம் என்னும் இவ்வரிய கிரந்தத்தை எல்லா ஜாதகாபிமானிகளும் அறிவார்களானாலும் இந்நூல் மூலபாடமா யிருப்பதால் தக்க விரிவுரை யொன்று வெளிப்படாமலிருந்தது யாவருக்கும் பெருங் குறையாயிருந்தது ஆனது பற்றிச் சிலரின் வேண்டுகோளால் வித்வான் மா. வடிவேலு முதலியாரவர்களால் இதற்கோர் விரிவுரை எழுதப்பட்டு, சுத்தமாய் அச்சிடப்பட்டிருக்கிறது.

அதிர்ஷ்ட ரகசியம் என்னும்

# ஸ்ரீ கணேச ஆரூட தீபிகை

[கணேச ஆரூட பெரிய சக்கரப் படத்துடன் விலை அணு 12.]

அன்பர்களே!

இக்கிரந்தம் கையொப்பமா யிருக்குமாகில் தாங்களே கைக்கண்டிபோல் கருத்தைத்தெரிந்து அவரவர்களுடைய அதிர்ஷ்ட பலாபலன்களை செவ்வையாய் தெரிந்துகொள்ளும் பொருட்டு ஆரூட சம்பந்தய் ஸ்ரீ கணேசர் ஔவைக்கு அருளிச்செய்த இந்த கிரந்தத்தை ஏட்டுப் பிரதியிலிருந்து அச்சிற் பதிப்பித்தனம். இதைப் பார்த்து பலாபலன்களை முய்த் தெரிந்துகொண்டு நமக்கு வரும் கஷ்டநஷ்டங்களை தெரிந்துமாய் வாழலாமென்பது உண்மை.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடாசலமுதலி தெரு, சென்னை.

அநுபோக

# அஸ்தரேகை சாஸ்திரம்

(சக்திதாஸன் எழுதியது.)

நூற்றுக்கணக்கான படங்களுடன் கூடியது: விலை ரூபா 2.

விளக்கமான அநேக படங்கள் அடங்கிய இச்செந்தமிழ் வசன நூலறிவினுல் ஆயுள், விவாக லாபம், குணம், பக்தி, அதிர்ஷ்டம், சந்தானம், அறிவு, சிற்றின்பம், வியாஜ்ஜியம், சக்தி, ஐசுவரியம்,



கண்டம், ஜயம், வியாதி, அபாயம், வஞ்சகம், பேரின்பம், காரியசித்தி, சௌக்கியம், தவை, அஜீரணம், இல்லறசுகம், மரணம் முதலிய விஷயங்களைச் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். அன்றியும், இது விதியின் பலனையும், வாழ்க்கையின் இரகசியங்களையும், இன்னம் அநேக மர்மங்களையும் வெளிப்படுத்துகிற திறவுகோலாக இருக்கிறது. முக்கால வரலாறுகளையும் அறிய இவ்வனுபவ நூல் துணையாகும். உங்கள் கையிலுள்ள ரேகைப்பலன்களை சுலபமாய் நீங்களேதெரிந்துகொள்ளலாம்.

நந்திவாக்கிய மென்னும்

## சோதிட சாஸ்திரம்

இரண்டாம் பாகம்

இதன் விலை ரூபா 1—8—0.

ஆழிசூழுலகத்தின் கண்ணுள்ள ஆரிய நண்பர்கள் அனைவருக்கும், சோதிடர்களுக்கும், இன்னும் மற்றுமுள்ள கனதனவான்களுக்கும் தெரியப்படுத்துவது யாதெனில்:— இதுகாறும் அநேக சோதிட சாஸ்திரங்களையும், ஆரூட சாஸ்திரங்களையும், கண்ணுற்று களிப்படைந்திருந்தபோதிலும், இந்த நந்திவாக்கிய மென்னும் சோதிட சாஸ்திரம் இரண்டாம் பாகத்தில் கூறும் அதிகாச்சரிய பலன்களடங்கிய இவ்வரிய நூலைக் கண்ணுறுக்குமின்றி இப் பத்திரிகைகள்மூலம் எடுத்தோத முடியாதென்பது திண்ணம்.

எல்லா புஸ்தகங்கள் அடங்கிய கிரயஜாபிதா தேவையுள்ளவர்கள் தங்கள் விலாசத்தை தெரிவித்தால் இனுமாக அனுப்பப்படும்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடாசலமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.